# மனிதகுலத்துக்குச் சுவாமி சிதானந்தரின் அருட்செய்தி

ஸ்ரீ சுவாமி சிதானந்தா






தெய்வீக வாழ்க்கைச் சங்க வெளியீடு

29.10.80

# மனித குலத்துக்குச் சுவாமி சிதானந்தரின் அருட்செய்தி

அருளியது :

**ஸ்ரீ சுவாமி சிதானந்தா**

தமிழாக்கம் :

**திரு. R. வரதராஜன், B. A., B. T.**







வெளியிடுவோர் :

**தெய்வீக வாழ்க்கைச் சங்கம்**

சிவானந்தா ஆஸ்ரமம்

இராசிபுரம் :: சேலம் ஜில்லா.

விலை ] 1980 [ ரூ. 3-00

* O *

Translation of:

# "Message of Swami Chidananda to Mankind"

in Tamil

* O *

Printed out of the magnanimous donation of:

A Humble Servant of the Holy Master

H. H. SRI SWAMI SIVANANDA

Printed at The Literary Press, Salem-636001

# பொருளடக்கம்:

# சமரஸப் பிரார்த்தனை

## ஸ்ரீ சுவாமி சிவானந்தா

*ஓம்—கருணையும் அன்பும் நிறைந்த இறைவா!*

உனைத் தொழுது வணங்குகின்றோம்;
நீ எங்கும் உள்ளாய், எல்லாம் வல்லாய், எல்லாம் அறிவாய்;
நீ ஸச்சிதானந்தப் பொருள், —மெய்ப் பொருளும்,
மெய்யறிவும், பேரின்பமும் நீயே;
எல்லா உயிர்களிலும் உறைபவன் நீயே;

*ஓம்—தயாபரத் தெய்வமே!*

உணரும் உள்ளமும், சமநோக்கும், தூய அன்பும்,
மெய்யறிவும், எமக்குத் தந்தருள்க;
மயக்கத்தை எதிர்க்கவும், மனதை வெல்லவும்,
உள்ளத்தில் ஒளிரும்
தெய்வீகத் தன்மையை, எமக்குத் தந்தருள்க;
ஆணவம், துராசை, வெறுப்பு, பேராசை, காமம்,
வெகுளி இவை பற்றுது எம்மைக் காத்தருள்க;
ஆன்மீக உணர்ச்சிகளை எமது உள்ளத்தில்
நிரப்பி அருள்க;

*ஓம்—உலகாளும் ஜெகதீசா!*

எல்லாப் பெயரிலும் உருவிலும் உனையே யாம்
காண்போமாக;
எல்லாப் பெயரிலும் உருவிலும் உனையே யாம்
வழிபடுவோமாக;
எப்பொழுதும் உனையே யாம் சிந்தித்து வருவோமாக;
என்றென்றும் உனிலேயே யாம் நிலைத்திருப்போமாக.

---




ஸ்ரீ சுவாமி சிதானந்தா

# மனித குலத்துக்குச்
# சுவாமி சிதானந்தரின்
# அருட் செய்தி

* ○ *

## காலத்தைச் செலவிடு

சிந்திப்பதற்குக் காலத்தைச் செலவிடு
 ஆற்றலுக்கு அதுவே ஆதாரம்
விளையாடுவதற்குக் காலத்தைச் செலவிடு
 மாறாத இளமையின் இரகசியம் அதுதான்
படிப்பதற்குக் காலத்தைச் செலவிடு
 ஞானத்தின் ஊற்று அதுதான்
பிரார்த்தனையில் காலத்தைச் செலவிடு
 உலகில் மிகவுயர்ந்த ஆற்றல் அதுதான்
நேசிக்கவும் நேசிக்கப்படவும் காலத்தைச் செலவிடு
 இறைவன் நமக்களித்த தனிஉரிமை அதுதான்
தோழமையோடு இருக்கக் காலத்தைச் செலவிடு
 இன்பத்தின் பாதை அதுதான்
சிரிப்பதற்குக் காலத்தைச் செலவிடு
 ஆன்மாவின் இனியகீதம் அதுதான்
கொடுப்பதற்குக் காலத்தைச் செலவிடு
 தன்னலங் கருதிவாழ ஒருநாள் போதாது
வேலை செய்வதற்குக் காலத்தைச் செலவிடு
 வெற்றியின் விலை அதுதான்
அறம் செய்வதற்குக் காலத்தைச் செலவிடு
 சுவர்க்கத்தின் திறவுகோல் அதுதான்.

## மற்றவர்கள்

இறைவா! நான் ஒவ்வொரு நாளும் தன்னலத்தை மறந்து வாழ்வதற்கு உதவி செய். அதனால் உன்னை வணங்கும்போதுகூட என்னுடைய பிரார்த்தனை மற்றவர்களுக்காகவே இருக்க வேண்டும்.

இறைவா! நான் செய்யும் பணிகளிலெல்லாம் நேர்மையுடனும் உண்மையுடனும் இருக்கும்படி உதவுவாயாக. உனக்குச் செய்யும் தொண்டுகளெல் லாம் மற்றவர்களுக்காகவே இருக்கவேண்டும்.

இறைவா! மண்ணுலகில் என் பணி நிறைவு பெற்று விண்ணுலகில் என் புதிய பணி தொடங்கும் போது நான் அடைந்த வெற்றிச்சிறப்பை மறந்து மற்றவர்களைப்பற்றியே எண்ணுமாறு அருள் வாயாக.

இறைவா! ''மற்றவர்கள்—ஆம்—மற்றவர்கள்'' அதுவே என் குறிக்கோளாக இருக்கட்டும். நான் மற்றவர்களுக்காகவே வாழ்வேனாக! அதன் காரண மாக உனக்காக வாழ்வேனாக!

## பிறந்தநாள் செய்தி

சுடரொளி வீசும் அமர ஆன்மாவே!

ஓம் தத் ஸத்! இறைவனுக்கு வணக்கங்கள். இன்று உனக்கு ஒருசில வார்த்தைகள் சொல்வதில் பெருமகிழ்ச்சி அடைகிறேன். அவைகள் உன் இதயத்தில் பொறிக்கப்பட்டு எண்ணங்களாலான கோயிலில் வைத்துப் போற்றப்படட்டும்.

பகுத்தறிவுடனும் ஞானத்துடனும் வாழ்வா யாக. வாழ்க்கையின் பொருளையும் நோக்கத்தை யும் நன்கு உணர்வாயாக. உன் உண்மையான இயல்பையும் நீ ஏன் இங்கு இருக்கின்றாய் என்பதை

யும் நன்கு உணர்ந்துகொள். நீ இவ்வுலகிற்குத் தற்காலிகமாக வந்துள்ள ஒரு பயணி. நீ எங்கிருந்து வந்திருக்கின்ருயோ அதுதான் உன் உண்மையான இருப்பிடம். இவ்வுலகிலுள்ளவை யெல்லாம் தற்காலிகமானவையே. எல்லாம் ஒருநாள் மறைந்து விடும்.

எனவே நிலேயான பொருளேத்தேடு. உன் உண்மையான நிலே உலகியல் தன்மையுடையதல்ல. அது ஆன்மீகமானது, அழிவற்றது. உன் உண்மை யான நிலேயை உணர, அழியாத பொருளோடு உன்னே ஐக்கியப் படுத்திக்கொள்ள வேண்டும். அதுவே உன் வாழ்க்கையின் நோக்கம். இந்த சுய அனுபவத்தைப் பெறுவதற்கான விடாமுயற்சியில் ஈடுபட்டிருக்கும்போது, உன்னேச் சுற்றிலுமுள்ள உலகத்தோடு நல்ல உறவை ஏற்படுத்திக்கொள்ள வேண்டும். எல்லா உயிர்களோடும் பெருந்தன்மை, பரிவு, இரக்கம், அன்பு, தன்னலமற்ற தன்மை, தொண்டு மனப்பான்மை ஆகிய பண்புகளோடு பழகவேண்டும். மக்களுக்குத் தொண்டு செய்து தெய்வீகத்தை நாடு. எல்லா உயிர்களுக்கும் பரிவு காட்டுவதுதான் பேரின்பத்துக்குத் திறவுகோல். அடக்கம்தான் மிக உயர்ந்த பண்பு. சத்தியம் தான் உயர்ந்த பொக்கிஷம். தன்னடக்கம் தான் அடையவேண்டிய மிக மேலான செல்வம். அகங் காரம் என்பது மிக மோசமான குற்றமாகும். உண்மையான மனிதஞக இரு. இறையொளி சுடர்விடும் ஆன்மாவாகத் திகழ். இவ்வாறு ஞானம், அமைதி, பேரின்பம் ஆகியவை சிகரமாக விளங்கும் வாழ்க்கையை அமைத்துக்கொள். அதஞல் மனிதகுலத்துக்கே நீ ஒரு வரப்பிரசாத மாக விளங்குவாய். மகிழ்ச்சியும் மன அமைதியும் பெறவேண்டுமென உன்னே வாழ்த்துகின்றேன்.

— சுவாமி சிதானந்தா

# 4

## இன்று !

சச்சரவில் சமாதானம் செய்துகொள். மறந்து போன ஒரு நண்பனைத்தேடிக் கண்டுபிடி. ஐயத்தை நீக்கி நம்பிக்கையை ஏற்படுத்து. அன்புடன் கடிதம் ஒன்று எழுது. அரிய பொருள் ஒன்றைப் பகிர்ந்து கொள். கனிவான பதிலைக் கொடு. இளைஞர்களை ஊக்குவி. சொல் அல்லது செயலின் மூலம் உன் நம்பிக்கையை வெளிப்படையாகக் காட்டு.

வாக்குறுதியைக் காப்பாற்று. காலத்தைப் போற்று. வன்மத்தை மறந்துவிடு. பகைவனை மன்னித்துவிடு. உற்றுக்கேள். நீ தவறு செய்திருந் தால் மன்னிப்புக் கேள். மற்றவரைப் புரிந்து கொள்ள முயல். பொறாமையை விரட்டிவிடு. நீ மற்றவர்களிடம் விடுக்கும் தேவைகளை நன்கு பரிசோதித்துப்பார். மற்றவரைப்பற்றி முதலில் எண்ணு. பாராட்டு. பரிவுடன் இரு. கண்ணிய மாக இரு. சிறிதளவு அதிகமாகச் சிரி.

நம்பிக்கையை உண்டாக்கு. தீமைக்கு எதிராகப் போர்க்கோலம் கொள். மெத்தனத்தை கண்டி. நன்றியறிதலை வெளிப்படையாகத் தெரிவி. உலகின் அழகிலும், விந்தைகளிலும் மகிழ்ச்சி கொள். உன் அன்பைப்பற்றிப் பேசு. அதைப்பற்றி மீண்டும் பேசு. அதைப்பற்றியே மீண்டும் மீண்டும் பேசு.

---

# 1. வாழ்க்கையின் உண்மையான நோக்கம்

*அருள்பெற்ற அமர ஆத்மனே !*

உனக்கு முன்னே உள்ள இந்த பிரபஞ்சத்தின் பின்னே ஒரு நிலையான உண்மை இருக்கின்றது. நாமறிந்த இந்த உலகத்திலுள்ள உருவங்கள், பெயர்கள் ஆகியவற்றின் பின்னே ஒரு முக்கியமான உயிரோட்டமுள்ள உண்மை இருக்கின்றது. அந்தப் பேருண்மைதான் பேரானந்தம், பேரின்பம் ஆகியவற்றின் தன்மையானது. கட்டுப்பாடற்ற சுதந்திரம், எல்லையற்ற அமைதி, வரம்பற்ற ஞானம், விவரிக்க வொண்ணுத பேரின்பம் ஆகியவைகளடங்கிய நிலைதான் அது. இவ்வுலக முழுவதிலுமுள்ள எப்பொருளும் அந்த இன்பத்துக்கு ஒரு சிறிதளவு கூட இணையாகாது. இந்தப் பேரின்பம், சுதந்திரம், அமைதி, ஞானம், மகிழ்ச்சி ஆகியவைதான் உன்னுடைய நிரந்தரமான நிலை. அதுதான் உன்னுடைய உண்மையான இருப்பிடம். அதுதான் உன்னுடைய இறுதியான முடிவு. அந்த நிலையை அடைவதே உன் வாழ்க்கையின் நோக்கம். அந்த உண்மையை அறிந்து கொண்டு அந்த அடைவதற்காகத்தான் உனக்கு இந்தப் பிறவி ஏற்பட்டிருக்கின்றது. இதை அறிவதால் தான் இவ்வுலக வாழ்க்கையில் உனக்கேற்படும் துன்பங்கள், துயரங்கள், பந்தங்கள் ஆகிய எல்லாவற்றையும் முழுதும் கடக்கக்கூடிய ஆற்றல் உனக்கு ஏற்படும். சுருங்கச் சொன்ஞல், இந்த மேலான உண்மையை உணர்வதுதான் உன் வாழ்க்கையின் இலட்சியம்.

நீ அதை எப்பெயரிட்டு வேண்டுமானுலும் அழைக்கலாம். ஆன்மா என்ருலும், ஆன்மீகத் தெளிவு என்ருலும், இறைவன் என்ருலும், இறை

யுணர்வு என்றுலும், தெளிவு என்றுலும், பரம் பொருளை உணர்தல் என்றுலும் அதையே குறிக்கும். ஆனல் உன் வாழ்க்கையின் மையமாகிய நோக்கம் அதை அடைவதுதான். மனித வாழ்க்கையில் குழப்பம், இழிநிலை, துன்பம் ஆகியவை நிறைந்திருந்த போதிலும், அவைகளிலிருந்து உன்னை மீட்கக் கூடிய உண்மை அதுதான். உண்மையானதும், கலப்படமற்றதுமான பேரின்பத்தை அனுபவிப்பதற்குரிய மேலான நிலையை அடையும் மிகச் சிறந்த வழி இவ்வுலக வாழ்க்கை என்பதுதான் உண்மை.

பண்டைக் காலத்திலும் தற்போதும் இந்திய நாட்டின் ஞானிகள் உயர்ந்த நோக்க முள்ளவர்கள். மேலும் அவர்களுடைய கருத்துக்கள் நடைமுறையை ஒட்டியவை. அவை பகுத்தறிவுக்கு இயைந்தும் அனைவரும் ஒத்துக்கொள்ளக் கூடிய வகையிலும் உண்மையோடு இணைந்துள்ளன. பேரின்பத்தையும் அமைதியையும் நாடும் முயற்சியில் முழுமை பெறுவதற்கு வெளியுலக வாழ்க்கையோடு இணைந்திருக்க வேண்டும். இவ்வாறு இணைந்துள்ள அமைப்பில் ஒருவன் உடலளவிலும் உள்ளத்தளவிலும் உள்ள இயல்புகள் ஆன்மீக இயல்பால் தூண்டப்படும் வேட்கையோடு இணைந்து செயல்பட வேண்டும். இந்த ஒருங்கிணைந்த செயல் முறை ஆன்மீக வாழ்க்கையின் பணிகளில் ஒன்றுகும்.

இந்த ஒருமைப்பாட்டைப்பற்றி நாம் இரண்டு விஷயங்களைக் கவனிக்கவேண்டும். நம் உடலும் மனமும் உட்கரணங்களும் நமக்குதவும் கருவிகளாகவே கொடுக்கப்பட்டுள்ளன. சாதாரண வாழ்க்கையில் மனிதன் பூத உடலுக்கும், புலன்களுக்கும் அடிமைப்பட்டு அவற்றின் கட்டளைப்படி நடக்கிருன். தான் அவைகளிடமிருந்து வேறு

பட்டவன் என்பதை உணர்வதில்லை. அடுத்து மனிதன் தன்னுடைய மனத்தின் ஆசைகளுக்கும் வேட்கைகளுக்கும் அடிமையாகி அவற்றின் வலையில் சிக்கித் தடுமாறுகிறான். புலன்களுக்கு வேலைக் காரனாகவும், மனதிலுண்டாகும் ஆசைகளுக்கும் வேட்கைகளுக்கும் அடிமையாகவும் தன்னை நினைத்துக்கொண்டு செயல்படுவது வருந்தத்தக்க தவறாகும். அவைகள் நமக்குப் புலன் இன்பத்தையும், வெளிப்படையான இன்பத்தையும் முடிவில்லாமல் அனுபவிப்பதற்காகக் கொடுக்கப்பட்ட கருவிகள்தாம் என்று எண்ணுவதும் மிகவும் தவறான கருத்தாகும். மிகவுயர்ந்த இலட்சியத்தைச் சென்று அடைவதற்கு வசதியாகத்தான் இக்கருவிகள் உனக்கு அளிக்கப்பட்டுள்ளன. எனவே மனம், உடல், புத்தி ஆகியவைகளை அவ்வாறே அறிந்து, அவ்வாறே பயன்படுத்தி, மேலான பயன்களைப்பெற முயலவேண்டும். ''மனிதன் மற்ற மக்களோடு இணைந்து செயல்பட்டு அக்கூட்டத்தின் ஒரு உறுப்பினன் என்ற முறையில் உண்மையான உழைப்பால் தன் வாழ்க்கையை நடத்தவேண்டும்,'' என்று ஞானிகளின் சிறந்த போதனைகளில் கூறப்பட்டிருப்பதைக் காண்கிறோம். இந்த உழைப்பே மற்றவர்களுக்காகச் செய்யப்படும் தன்னலங்கருதாத சேவையாகவும் இருக்கலாம்.

மனிதன் தன்னுடைய பல்வேறு திறமைகளைப் பயன்படுத்தி மற்றவர்களுக்குச் செய்யும் ஒவ்வொரு சிறப்பான உதவியும் இம்மாதிரி மேலான பணியின் உருவத்தில்தான் இருக்கிறது என்பது அனுபவத்தால் அறியப்படுகிறது. நடைமுறையில் ஒரு மனிதன் தன்னுடைய குடும்பத்தவர்கள், நெருங்கிய உறவினர்கள், நண்பர்கள் ஆகியவர்களைப் பேணுதல் வேண்டும். தன்னைப்பொறுத்த அளவில் தன் உடம்பையும் மனத்தையும் பாதுகாத்துக் கொள்ள

வேண்டும். ஆகவே மற்றவர்களுக்கு உதவுவதாலும், தொண்டு செய்வதாலும் உன்னையே நன் முறையில் வளர்த்துக் கொள்கிறாய். இம்மாதிரி செய்வதால் உன் ஆன்மீக வாழ்க்கைக்குப் புறம்பாக நடப்பதில்லை. சத்தியத்தையும், நேர்மையையும் அடிப்படையாகக் கொண்டு உன் வாழ்க்கையை நடத்துவதற்காக நீ செய்யும் எவ்வித முயற்சியும், உன்னுடைய ஆன்மீக மறுமலர்ச்சியில் நீ அடைய வேண்டிய முன்னேற்றத்திற்கு எவ்விதத்திலும் தடையாக இருக்காது.

வெளிப்படையான வாழ்க்கையில் சரியான செயலையே பின்பற்ற வேண்டும். அம்மாதிரியே மனத்தளவிலான வாழ்க்கையில் சரியான (நேர்மையான) எண்ணங்களே நிலவவேண்டும். புலன்களின் பின்னே தொடர்ந்து செல்லும் எண்ணங்கள் தவறானவை. நேர்மையான கொள்கைகளைப் பின்பற்றும் எண்ணங்களே சரியானவை. எனவே, நல்லனவை பற்றிய எண்ணங்களையும், தூய்மையான எண்ணங்களையும், தன்னலமற்ற எண்ணங்களையும் மட்டுமே எண்ணு. ''எனக்கு என்ன கிடைக்கும்? எனக்கு என்ன கொடுப்பார்கள்? என் வாழ்க்கையில் என்னென்ன இன்பங்களும், மகிழ்ச்சியும் கிடைக்கும்?'' என்று எண்ணுவதை மறந்துவிடு. அவைகளுக்கு மாறாக, ''என்னால் மற்றவர்களுக்கு என்ன நன்மை செய்ய முடியும்? மற்றவர்களுக்கு எந்த வகையில் இன்பத்தைப் பெருக்கலாம்? மற்றவர்களின் துயரத்தை எவ்வகையில் குறைக்கலாம்? இந்தப் பிரபஞ்சத்தைப்பற்றிய உண்மையான ஞானத்தைப்பெற என்னுடைய அறிவை எவ்வாறு பயன்படுத்தலாம்? எது உண்மையானது? எது பொய்யானது? எது நிலையானது? எது நிலையற்றது? இறுதி இலட்சியம் எது? நிலையற்ற இந்த வாழ்வில் உள்ளது எது?'' என்பதைப்பற்றி

எல்லாம் எண்ணவேண்டும். இவ்வாறு உண்மையில் நல்லவைகளைப்பற்றியும், வெளிப்படையாக மட்டும் இன்பம் கொடுப்பவைகளைப்பற்றியும், உண்மையானவைகளையும், பொய்யானவைகளையும், நிலையானவைகளையும் மறைந்துபோகக் கூடியவைகளைப்பற்றியும் உன்னுடைய அறிவின் உதவியால் பிரித்தறிய வேண்டும். இவ்வுலகத்தைப் பற்றிய உண்மை நிலையையும், இங்குள்ள பொருள்களின் உண்மையான இயல்புகளையும், உன்னுடைய உண்மை நிலையையும் சரியாகத் தெரிந்து கொள்வதற்கு உன் அறிவைப் பயன்படுத்த வேண்டும். இவ்வாருக, உன் மனதிலுள்ள எண்ணங்களும், ஆசைகளும், எவ்வாறு செயல்படுகின்றன என்றும், உன்னுடைய புலன்கள் எவ்வாறு உன்னை ஏமாற்ற முயல்கின்றன என்றும், உன் எண்ணங்களையும் நீ அடக்கி ஆளலாம் என்றும் அறிந்து கொள்ளலாம். பிரித்தறியும் உணர்வைத் தூண்டி விடுவதால், அது உனக்கு வழிகாட்டியாக உதவ முடியும். உன் ஆன்மீக வாழ்க்கை உன் இலட்சியத்தை நோக்கி அழைத்துச் செல்லவேண்டும் என்பதே எல்லாவற்றிலும் மிகவும் முக்கியமானது.

செயலுக்குப்பின்னே மிகவும் தூய்மையான நோக்கம் இருக்கவேண்டும். எண்ணங்களும், நோக்கங்களும், எப்பொழுதும் தூய்மையுடனும், உயர்ந்தவைகளாகவும், பெருந்தன்மையுடனும் இருக்கவேண்டும். அப்பழுக்கற்ற தூய்மையான நிலையைப் போற்றும் ஒருவருடைய, சொல்லும் செயலும் தூய்மையாக இருக்கும். பேராசை, காமம், கோபம் இவற்ருல் தூண்டப்படும் தூய்மையற்ற எண்ணம் அல்லது நோக்கத்தால் உண்டாகும் செயல் உடனே பயன் அளிக்காது போகும். பேராசை என்னும் தீக்கு மேலும் மேலும் உணவளிப்பதால், அதிக பயங்கரமாக எரியத்

தொடங்கும். போதுமென்ற மனம் படைத்த மனிதன், எப்பொழுதும் விழிப்புடன் இருப்பதால் பேராசையால் விளையும் எண்ணத்தைத் தெரிந்து கொண்டு, அதைத் தன் மனத்தைவிட்டு உடனே வெளியேற்றுகிறான்.

இவ்வாழ்க்கை மிகவும் அரிது. ''இப்பிறவியில் மிகவுயர்ந்த பேரின்ப நிலையைப் பெறவும் மிகவுயர்ந்த இன்பத்தை அனுபவிக்கவுமே நான் இங்கு வந்திருக்கின்றேன். அந்த இறுதி இலட்சியத்தை அடைவற்காகவே இந்த மனிதப் பிறவி, மனித வாழ்க்கை என்னும் அரிய வாய்ப்பைப் பெற்றிருக்கிறேன்,'' என்று எண்ணிக்கொள்.

இந்த வாய்ப்பு உனக்கு கொடுக்கப்பட்டுள்ளது. இந்த வேட்கையும், உயர்ந்த கொள்கைகளில் நாட்டமும் எதிர்காலத்திலும் இவ்வாறே தொடர்ந்து இருக்கும் என்று யாருக்குத் தெரியும்? ஆகையால் வாழ்க்கையின் உண்மையான நோக்கத்தை உணர்ந்து அறிவதற்கான உன்னத முயற்சியில் ஈடுபட இதுவே தக்க தருணமாகும். எனவே மிகவுயர்ந்த பேற்றைப் பெறவும், ஆன்மீகத் தெளிவு என்னும் வியக்கத்தக்க பேரானந்தத்தை அனுபவிக்கவும் அக்கறையுடனும் தீவிரமாகவும் இப்பொழுதே முயற்சி செய்யவேண்டும்.

---

## 2. உண்மையான இன்பம்: உயிர்கள் அனைவற்றின் ஒருமைப்பாட்டை உணர்தல்

பழமையான வேதங்கள் நினைவுக்கெட்டாத காலத்தில் இருந்தே உயிர்கள் அனைவற்றின் ஒருமைப்பாடாகிய உயர்ந்த உண்மையை மனித குலத்துக்குத் தெளிவாகவும் இடைவிடாதும்

எடுத்துக் கூறிக்கொண்டிருக்கின்றன. ''இரு வேறு பட்ட உணர்வே துயரங்கள் அனைவற்றுக்கும் காரணம்,'' என்று வேதங்கள் உறுதியாகக் கூறுகின்றன. வேற்றுமை காரணமாக மிகப்பெரிய அச்சம் தோன்றுகிறது. சத்தியம் என்பது ஒன்றே. அது ஒன்றைத்தவிர வேறெதுவுமில்லை. அதிலிருந்து இன்பம் தோன்றுகிறது. இங்குள்ள எல்லாமும், நமக்கு முன்னே காணப்படும் இப்பிரபஞ்சம் முழுவதும் அந்த உண்மையைத்தவிர வேருென்று மில்லை. அதுவே இப்பிரபஞ்சத்தின் வடிவமாகத் தோன்றுகிறது. அதைத்தவிர நிலைத்திருப்பது எதுவுமில்லை. மேலான சத்தியமும், முழுமுதலான உண்மையும் அதுதான். இந்த இரண்டும் ஒன்று சேரும்போது, வேற்றுமை என்பதே இல்லை என்ற உண்மையை நமக்குப் புலப்படுத்துகின்றன. நாம் உண்மையை அடிப்படையாகக் கொண்டு வாழ்வோமானல், ஒருமைப்பாட்டை நாமாகவே உணர்வோம். ஏனென்ருல் நம் வாழ்க்கையே ஒருமைப் பாடாகிய உண்மையை அடிப்படையாகக் கொண்டு அமைந்துள்ளது.

எல்லா உயிர்களின் ஒருமைப்பாட்டைக் குறிக்கும் மனித குலத்தின் அடிப்படையாகிய உண்மை தான் நமக்குள்ளே இருக்கும் சிறந்த இயல்பாகும். நம்முடைய வெளிப்படையான இயல்புகளில் வேற்றுமைகள் காணப்படுகின்றன. அனைவரும் உருவத்தில் வேறுபடுகின்றனர். படைப்பில் ஒற்றுமையைவிட வேற்றுமைதான் பொதுவிதியாகத் தோன்றுகிறது. இவ்வுலகில் எங்குபார்த்தாலும், எவ்வுயிரிலும் வேறுபட்ட இயல்புகளைத் தாம் பார்க்கின்ருேம். ஒரு மரத்திலுள்ள இரண்டு இலைகள் ஒன்றுபோல் இருப்பதில்லை. ஒரே மரத்தில் கிளைகளும், கொம்புகளும், இலைகளும், பழங்களும் வேறுபட்டிருந்தாலும் அவைகள் ஒரே வேரிலிருந்து

தான் தோன்றியுள்ளன. ஒரே வேர்தான் உள்ளது; அவை அனைத்தும் ஒன்றிலிருந்தே தோன்றியுள்ளன. எனவே இங்குள்ள வேற்றுமைகளை எல்லாம் ஆராய்ந்து நோக்கினுல், அவைகள் ஒரே அடிப் படையிலிருந்து தோன்றி இருப்பதையும், அவை ஒரே ஆதாரமுள்ளவை என்பதையும், அவ்வகை யில் ஒன்றுபட்டிருப்பதையும் அறியலாம். இம் மாதிரியான பல்வேறு கிளைகளையும், கொம்புகளை யும் இலைகளையும் உடைய மரமானது ஒரே வேர் என்னும் ஆதாரத்தில் அமைந்துள்ளது. இதைவிட வேறு எந்த உதாரணத்தையும் மனித குலத்தின் ஒருமைப்பாட்டை விளக்குவதற்குக் கூறமுடியாது. ஸ்ரீமத் பகவத் கீதையில் 15-வது அத்தியாயத்தில் இப்பிரபஞ்சம் தலைகீழாகவுள்ள ஒரு மரத்துக்கு ஒப்பிடப்பட்டுள்ளது. கணக்கற்ற, பல்வேறு வகையான நாம ரூபங்களை உடைய இந்த மரத்தின் வேர்கள் மேலேயுள்ள மிகவுன்னதமான மாருத முழுமுதற் பொருளிடம் இருக்கின்றன.

''அதன் வேர்கள் மேலே இருக்கின்றன; கிளை கள் பல்வேறு திசைகளிலும் பரந்து கிடக்கின்றன,'' என்று பகவான் சொல்கிருர். ஆனுல் அவற்றின் அடிப்படையான ஒரே ஆதாரத்தை எவ்விதத் திலும் சிறிதளவுகூட பாதிக்கவோ மாறுபடச் செய்யவோ இல்லை. மனித குலத்தின் ஒருமைப் பாட்டின் அடிப்படையும் அவ்வாறுதான் இருக் கின்றது.

மக்களிடையே மொழி, பண்பாடு, நடை உடை பாவனைகள், பழக்க வழக்கங்கள் ஆகிய வற்றில் எண்ணற்ற வேறுபாடுகள் இருப்பதால், ஒரே மாதிரியான வாழ்க்கை, ஒரே மொழி, ஒரே மாதிரியான கல்வி ஆகியவைகள்தான் எல்லா மக்களுக்கும் இருக்கவேண்டும் என்று அவர்களைக்

கட்டாயப்படுத்தி வெளிப்படையானதும் மேலெழுந்தவாரியானதுமான ஒரு ஒற்றுமையை ஏற்படுத்த முயலுவோமானால் அதில் நமக்கு வெற்றி கிட்டாது. ஏனென்றால் அவ்வழியில் மனிதனுடைய உள்ளேயுள்ள இயல்பை அணுக முடியாது. வெளித் தோற்றத்தைத் தவிர மனிதனுக்குள்ளே ஆழமான ஒன்று இருக்கின்றது. மனிதனிடத்தில் ஒருமைப்பாட்டுணர்வை தூண்ட வேண்டுமானால், அவனுக்குள்ளே இருக்கும் சிறப்பான இயல்பை அணுகவேண்டும். வெளித் தோற்றத்திலுள்ள ஒற்றுமை ஒருமைப்பாடாகாது. அது எப்போதும் வெளித்தோற்றத்தில் மட்டுமே இருக்கும். உண்மையான ஒற்றுமை என்பது, உள்ளத்திலும், உணர்விலும், உயிரிலும்தான் இருக்கும். மனிதனின் உள்ளத்தில் உள்ள இயல்பு தான் இந்த ஒருமைப்பாட்டுக்கு அடிப்படையான ஆதாரமாக அமைகிறது.

எப்பொழுதும் மாறுததும், வாழ்க்கையின் பொதுவான அடையாளமுமாகிய ஒன்று, எல்லா உயிர்களுக்குள்ளேயும் இருக்கின்றது. அதுவே தனிப்பட்ட ஒருவரின் இறுதியான சாரம்; ஆன்மீக இயல்பு; ஆன்மீக தனித்தன்மை. இந்த ஆன்மீக இயல்பே உயிர்களின் ஒருமைப்பாட்டைக் குறிக்கின்ற இயல்புடையது. உருவங்கள் வேறுபட்டிருக்கலாம்; பேசும் மொழிகள் வெவ்வேறாக இருக்கலாம்; பண்பாடுகள் வேறாக இருக்கலாம். ஆனால் உயிர்களனைத்தும் வாழ்கின்றன; தனித்தனியே நடமாடுகின்றன. ஒவ்வொருவரும் ''நான் வாழ்கிறேன்'' என்று உணர்கிறார்கள். இந்த உணர்வு தான் வெளிப்படையாகப் புலப்படும் வேற்றுமைகளுக்கெல்லாம் அடிப்படையாக அமைந்துள்ள ஒருமைப்பாட்டின் அம்சத்திற்கு ஆதாரமாகிய கொள்கையாகும்.

பகவத் கீதையில் இதைப்பற்றி மிகவும் அழகாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. ஒரு மாலையிலுள்ள மணிகள் பலவகையான நிறங்களும், வடிவங்களும் உடையன. ஆனால் அவைகள் கோர்க்கப்பட்டுள்ள நூல் அவைகளுக்குப் பொதுவானது. அந்த நூல் அவைகளை ஒன்றாக இணைப்பதோடு அவைகளின் மையங்களிலுள்ள துவாரங்களின் வழியேயும் செல்கிறது. அம்மாதிரியே வெளித்தோற்றத்தில் பல்வேறு வகைப்பட்ட உயிர்களை இணைக்கும் பொதுவான அம்சம் ஒன்றுள்ளது. அது எல்லா உயிர்களுக்கும் ஒன்றாகவும், ஒரே மாதிரியாகவும் இருக்கின்றது. இந்த மாதிரி தெய்வீகத் தன்மை ஒன்று எல்லா உயிர்களுக்குள்ளேயும் அமைந்திருக்கின்றது என்ற உணர்வை மக்களுக்குத் தெளிவாக எடுத்துக் காட்டுவதுதான் மனிதகுலத்துக்கும் இந்தப் பிரபஞ்ச முழுவதுக்கும் ஒருமைப் பாட்டினை ஏற்படுத்துவதற்குரிய சிறந்த அடிப்படை ஆதாரமாகும். இறைவன் உள்ளே இருப்பதனால்தான் உயிர்கள் வாழ்கின்றன என்பது நமக்குத் தெரியும். ஏனென்றால் இறைவன் உயிர்களின் உள்ளே உறைபவன்; அவைகளை வாழ்விப்பவன். அவன் இந்தப் பிரபஞ்சமாகக் காட்சி அளிக்கிறான். மாறாத, நிலையான ஜீவன் அல்லது தோற்றம் அவன்தான். இந்த இறைவனுடைய மாறாத தோற்றம் உயிர்கள் எல்லாவற்றுக்கும் பொதுவானது.

எனவே மனிதனுடைய சிறப்பான தெய்வீக இயல்பை உணர்வதில்தான் மனிதகுலத்தின் ஒருமைப் பாட்டிற்கான உறுதியான அடிப்படை இருக்கின்றது. இதை நன்குணர்ந்து உருவங்களுக்கும் பெயர்களுக்கும் அப்பால் செல்லவேண்டும். மேற்பரப்பிலுள்ள மாறக்கூடிய 'தோற்றங்களைப் பார்க்கவேண்டாம். ''என்னுடைய சிறப்பான

இயல்பில், வாழும் உயிர்கள் அனைவற்றோடும் ஒன்று பட்டவன் நான். தூய ஒளி, தூய ஆன்மா ஆகியவற்றில் எல்லா உயிர்களோடும் இணைந்துள்ளவன். தோற்றமும் ஒன்றுதான்; உயிரும் ஒன்றுதான்,'' என்ற தெளிவுடன் எப்பொழுதும் இரு.

இந்த விழிப்புணர்ச்சியையும் யூகமும் உடையவர்களுக்கு ஞானம் அதிகமேற்படுகின்ற காரணத்தினால், அவர்கள் வாழ்க்கை மற்றவர்களுக்கு ஒரு வரப் பிரசாதமாக அமைகிறது. மற்றவர்கள் தங்களுக்குச் செய்ய விரும்பாத செயல்களை தாமும் மற்றவர்களுக்குச் செய்யமாட்டார்கள். ''எனக்கு மகிழ்ச்சியும் இன்பமும் தருபவை மற்றவர்களுக்கும் மகிழ்ச்சியும் இன்பமும் தரும் என்பது எனக்குத் தெரியும்,'' என்பதுதான் அவர்களுடைய கொள்கை. ஆகையால் இந்த ஆதாரக் கல்வி எல்லாருக்கும் அளிக்கப்பட வேண்டும். இந்தத் தெளிவு இல்லாவிட்டால், ஒருமைப்பாட்டுணர்ச்சி எவ்வாறு உண்டாகும்? ''நாம் அனைவரும் ஒன்றாக அமர்வோம்; ஒன்றாக வாழ்வோம்; ஒன்றாக சிந்தனை செய்வோம். நாம் அனைவரும் ஒரே மாதிரியே சிந்தித்துச் செயல்படுவோமாக,'' என்பது பழமையான வேதங்களிலுள்ள ஒரு பிரார்த்தனை.

''மனிதனே! மற்றவர்களுடைய நல்வாழ்வுக்காகவும், மற்றவர்களுக்குச் சேவை செய்யவும், மற்றவர்களுக்கு நன்மை செய்யவும் தான் இந்த உடம்பு உனக்களிக்கப்பட்டிருக்கிறது'' என்று பரத கண்டத்தின் நீதி சாஸ்திரத்தின் ஆதிகர்த்தாவாகிய மனு கூறுகிறார். வாழ்க்கையின் இந்த உன்னத நோக்கத்தைப் பற்றித் தெளிவு ஏற்படுவதால் மற்றவர்களுக்கு இன்பத்தையும் உதவியையும் அளிக்கும் ஆதாரமாக அமையும். இந்தக் கொள்

கையை நன்கு வளர்க்கச் செய்யும் ஆதாரக் கல்வி, மனித குலத்தில் நிரந்தரமானதும் உண்மையானது மான ஒருமைப்பாட்டை உறுதியாக ஏற்படுத்தும்.

''நாமிருவரும் ஒன்று; எனவே நாமிருவரும் சேர்ந்து மூன்ருவது ஆளை எதிர்ப்போம்'' என்பது போன்ற கொள்கைகளின் அடிப்படையில் மனித குலத்தின் ஒருமைப்பாட்டை ஏற்படுத்த முடியாது. மக்களிடையே பல்வேறு வகையான சங்கங்கள் ஏற் படுத்தப்பட்டுள்ளன. ஒரு சில மக்கள் ஒன்று சேர்ந்து மற்ருெரு கூட்டத்தாரை எதிர்க்கின்ருர் கள். அது ஒற்றுமை ஆகாது. மற்ருெரு கூட்டத் தாருக்கு தீங்கு விளைவிப்பதற்காக, வெறுப்பின் அடிப்படையில் ஆரம்பிக்கப்பட்டிருப்பதால், அது தன்னையே அழித்துவிடும். ஒரு சிறிது காலத்திற்கு ஒற்றுமை போலக் காணப்பட்டாலும், உண்மை யான ஒற்றுமையின் முக்கியமான இயல்பு அதில் இல்லை. அது அழிவை உண்டாக்கும் ஒற்றுமை. ஒற்றுமை என்பது ஆக்க பூர்வமாக இருக்க வேண் டும். இந்தப் பிரபஞ்சம் முழுவதையும், மனித குலம் முழுவதையும் அணைத்துச் செல்லாத ஒற்றுமை ஒருதலைப்பட்டதாகும். ஏனென்ருல் ஒரே தெய்வீக ஒளிச்சுடர்தான் எல்லா உயிர்களிலும் குடியிருக்கின்றது. நாம் அனைவரும் பிரபஞ்ச மாகிய குடும்பத்திலுள்ள சகோதர சகோதரிகள். எல்லோருடைய இன்பம்தான் வாழ்க்கையின் கடமை என்றும், மற்றவர்களும் இன்பம் அடைய வேண்டும் என்ற மேலான கொள்கையை ஏற்றுக் கொண்டு அதைப்பற்றி நன்கு உணரும்போது தான் நீ உண்மையாக வாழ்கிருய். ஒருமைப்பாடு, அனைவருடைய இன்பம் ஆகிய இரண்டும் ஒன்றுக் கொன்று இணைந்துள்ளவை. இந்த ஒருமைப் பாட்டுணர்ச்சி இல்லாவிட்டால், எல்லாருடைய இன்பமும் நன்மையும் கெட்டுவிடும். பிரபஞ்சம்

முழுவதும் உயிரோட்டமுள்ள கொள்கை துடிப்புடன் பரந்து கிடக்கின்றது. வளர்ந்து கொண்டிருக்கும் இளம் ஆன்மாவானது தன்னலமும் போட்டி மனப்பான்மையும் நிறைந்த உலக வாழ்க்கையால் கவரப்படுமுன், இந்த ஆழ்ந்த, அழகான உண்மையை அதற்கு உணர்த்த வேண்டும். ''என்னுடைய நலம்'' ''உன்னுடைய நலம்'' என்பவைகளுக்குப் பதிலாக ''நம்முடைய நலம்'' என்று மக்கள் பேசுவார்களானால், வருங்காலத்தில் தலைமையேற்கவிருக்கும் இளம் சமுதாயத்திற்குச் சரியான கல்விமுறையை அளிக்கும் பிரச்சினையை ஒருவாறு தீர்க்க முடியும். நாட்டின் ஆட்சி பீடத்தில் அமர்ந்துள்ள பொறுப்புள்ள மக்களின் கவனத்திற்கும் சிந்தனைக்கும் இப்பிரச்சினை வரவேண்டும். ''மனித குலத்தின் ஒற்றுமை, உயிர்கள் அனைத்தின் ஒரே தன்மை ஆகியவற்றின் சிறப்பான இந்த இயல்பு ஏற்றுக் கொள்ளப்பட்டு நம் வாழ்க்கை முழுவதிலும், ஒருவருக் கொருவரிடையேயுள்ள தொடர்பிலும் வெளிப்படுத்தப்பட வேண்டும், என்பதே என் பிரார்த்தனை.'' அப்பொழுது தான் இந்த ஒருமைப்பாட்டுணர்வு புகழ் பெற்றதும், இன்ப மூட்டுவதுமான உண்மையாகும். மனித குலத்தை இறைவன் ஆசீர்வதிப்பாராக. உலகிலுள்ள பெயர்கள், உயிர்கள் அனைத்திலும் இறைவனையே காணும்படி மக்கள் அனைவருக்கும் இறைவன் உணர்வூட்டுவாராக! இறைவன் உன்னை ஆசீர்வதிப்பாராக!

---

## 3. முனிவர்கள் – மனிதகுலத்தின் வழிகாட்டிகள்

மனிதகுலத்தின் ஒருமைப்பாடு உண்மையான தாகவும், நீடித்தும் இருக்கவேண்டுமானால், அது எல்லா உயிர்களுக்கும் பொதுவான ''சச்சிதானந்த ஆத்மா'' எனப்படும் இயல்பை அடிப்படையாகக் கொண்டு அமைந்திருக்க வேண்டும். வேறெந்த அடிப்படையில் அமைந்திருந்தாலும் அது பயனுடையதாகாது. இளைஞர்கள் எல்லாம் சேர்ந்து கருப்புத்தாடி உடையவர்கள் எல்லாம் ஒரு கட்சியை அமைக்கவேண்டும் என்று முடிவு செய் தால் அது எந்த அளவுக்குப் பயன்தரும் என்று எண்ணிப்பாருங்கள். விரைவில் அவர்கள் தாடி களெல்லாம் நரைத்து வெண்ணிறமாக மாறிவிடும். ஆனால் ஆன்மாக்களில் ஒளியூட்டும் பொதுவான உணர்வு ஒன்றுதான். அதுவே என்றும் மாறாததும், எப்பொழுதும் நிலையானதுமான சத்தியம். எனவே அந்த உணர்வை ஆதாரமாகக் கொண்ட உணர்வு தான் உண்மையானதாகவும் நீடித்ததாகவும் இருக்கும்.

மதங்களின் நோக்கம் இந்த உணர்வைத் தட்டி எழுப்புவதாக அமைந்துள்ள காரணத்தால், குருதேவர் மனிதகுலத்தின் ஒற்றுமைக்குத் தகுந்த அடிப்படையாக மதத்தையே தேர்ந்தெடுத்தார். மதம் என்று சொல்லும்போது குருதேவர் மத நிறுவனங்களைக் குறிப்பிடவில்லை. ஏனென்றால் அவைகள் நாட்டில் பிளவுகளையும், கலவரங்களையும் போர்களையும் உண்டாக்கின. அங்கு மதத்தின் உண்மையான நோக்கத்தை மறந்து விடுகிறார்கள்; அதன் சாரம் நினைவிலிருப்பதில்லை. அதன் வெளி யுருவம் மட்டுமே அங்கு காணப்படுகிறது. தீர்க்க தரிசிகளின் வாழ்க்கையில் பெருமையுடன் காணப்

படுகின்ற உன்னத மதம் அங்கிருந்து மறைந்து விடுகின்றது.

உண்மையான மதத்தின் சாரம் என்ன? தூய்மையோடு இரு. அடக்கமாக இரு. தன்னல மற்ற தொண்டு செய். மற்றவர்களுடைய நலமே உன்னுடைய கவலையாக இருக்கட்டும். உன்னுடைய வாழ்க்கையில் இன்பமும் வசதியும் நிறைந்திருக்க வேண்டுமானால், மற்றவர்களுடைய வாழ்க்கையை இன்பமும் வசதியும் உடையதாகச் செய்வதற்கு முயற்சி செய். நீ மதிப்புபெற விரும்பினால், மற்றவர்களை மதித்து நட. பிறருக்கு துன்பமோ அவமதிப்போ விளைவிக்காதே. உன்னைப் போலவே மற்றவர்களையும் நினை. இதுதான் மதத்தின் உண்மையான சாரம்.

வெவ்வேறு முனிவர்கள் வேறுபட்ட மதங்களை யும், நாடுகளையும் சார்ந்தவர்களாக இருந்த போதிலும் அவர்கள் அடிப்படையில் ஒரே மாதிரி யான வாழ்க்கையைத்தான் எடுத்துரைக்கிறார்கள். ஒரே பரம்பொருளின் பல்வேறு வகையான தோற்றங்களை வழிபட்டும், வெவ்வேறு உருவங்களை வெவ்வேறு பெயர்களிட்டு வணங்கியும் அவர்கள் தங்கள் இலட்சியம் அல்லது முடிவை அடைகிறார் கள். ஆனால் நாம் பின்பற்றுவதற்காக நமக்கு முன்னே காட்டும் வாழ்க்கைமுறையானது, இவ்வுலகமெங்கும் படைப்புக் காலந்தொட்டு ஒன்றாகவே இருக்கின்றது. அது எந்த வழி? முனிவர் களின் வழி கடவுள் நம்பிக்கையை அடிப்படை யாகக் கொண்டது. அந்த வழி வாழ்க்கையின் தூய்மையை அடிப்படையாகக் கொண்டது. ஒரு முனிவர் எந்த நாட்டைச் சேர்ந்தவராக இருந் தாலும், எந்த இனத்தவரானாலும், தம் சொந்த எடுத்துக் காட்டாலும், முன்மாதிரியாக நடத்தும்

வாழ்க்கையாலும், அவர் காட்டும் வழி ஒரே மாதிரியாகவே இருக்கின்றது.

முனிவர்கள் அனைவரும் எளிய தன்மையுடன் இருந்தனர். அவர்களிடம் குறுகிய மனப்பான்மையும் வஞ்சக நெஞ்சும் இல்லை. அவர்களுக்கு மனிதர்களை நம்பாமலிருக்கத் தெரியாது. எல்லோரையும் நம்பினார்கள். அவர்களிடம் இருந்த மனப்பான்மையின் சிறந்த பண்பு இதுதான். அவர்கள் நெஞ்சில் வஞ்சக மற்றவர்கள்.

உலகியல் மனிதன் தன் வாழ்க்கையில் முன்னேற்றம் பெறுவதற்காகத் தனக்குத் தேவை என்று கருதும் அறிவுக் கூர்மையும் மதி யூகமும் அவர்களிடம் இல்லை. ஆனால் அவைகளின் உதவியால் அவன் எங்கு செல்கிறான்? அவன் தன்னுடைய நாசத்தையும் அழிவையும் நோக்கியே மிகவும் வேகமாகச் செல்கிறான். ஆனால் மதிமயக்கமடைந்துள்ள மனிதன் தன்னுடைய வாழ்க்கையில் முன்னேற்றம் பெற இன்றியமையாத தேவையாகக் கருதும் இந்த அறிவுக் கூர்மை முனிவர்களிடம் இல்லை. அதனால் அவர்களுக்கு எவ்விதமான நஷ்டமும் கிடையாது. அவர்கள் மக்களால் போற்றப்பட்டார்கள். நெஞ்சில் வஞ்சமில்லாத காரணத்தால் அமரரானார்கள். அவர்கள் இயல்பு, எளிமையும் அடக்கமும் பளிங்குபோல் தூய்மையாக இருந்தது. இவைகளெல்லாம் குழந்தைகளின் பண்புகள். முனிவர்கள் குழந்தைகளைப்போன்று இருந்தார்கள்.

இரண்டாவதாக மக்களில் 1000க்கு 999 பேரிடம் அகந்தை என்கின்ற தன்மை மேலோங்கி இருக்கிறது. மனிதனுக்கு "நான்" என்ற எண்ணமிருக்கிறது. எவரும் தன்னைப் புறக்கணிக்கக் கூடாது என எண்ணுகிறான். முனிவர்கள் அடக்

கத்தோடு இருந்தார்கள். அவர்கள் உணர்வுகளில் அடக்கமாகவும் தாழ்மையோடும் இருந்தார்கள். ''உணர்வுகளில் கீழ் நிலையில் இருப்பவர்கள் பெரும் பேறு பெற்றவர்கள். ஏனெனில் அவர்கள் விண்ணுலக இராஜ்ஜியத்திற்குரியவர்கள்''. கீழ் நிலையிலுள்ளவர்கள் என்னும்போது செல்வத்தைப் பற்றிக் குறிக்கவில்லை. ஒரு முனிவரிடத்தில் எல்லாம் இருக்கலாம். ஆனால் அவர் இறைவனின் திருவடிகளிலுள்ள ஒரு தூசு என்றே தம்மைக் கருதுகிறார். ''இறைவன்தாம் எல்லாம். நான் ஒருபொருட்டல்ல. இறைவா! நீதான் எல்லாம்''. இதுதான் புனிதமான முனிவர்கள் அனைவரின் பண்பு. முற்றிலும் அகந்தை நீங்கிய நிலையும் அதன் விளைவாக ஏற்படும் அடக்கமும் முனிவர்கள் அனைவரின் பொதுவான பண்பாகும். மாயையின் பிடியில் அகப்பட்டுள்ள மதிமயக்கமுள்ள சாதாரண மனிதனுக்கு இயல்பாக அகந்தை இருப்பதைப்போல, முனிவர்களிடம் அடக்கம் என்னும் பண்பு இருக்கிறது. அடக்கமானவர்கள் பெரும்பேறு பெற்றவர்கள். இதே கருத்தையே இந்திய நாட்டில் அவதரித்த மகான்களில் ஒருவரும் கூறுகிறார். அவர்கள் இறையன்பாகிய மகிழ்ச்சிக் கடலில் மூழ்கித் திளைத்த ஸ்ரீ சைதன்ய மகாப்பிரபு ஆவார். ஒரு மனிதன் தன்னைப் புல்லினும் கடையனாகக் கருத வேண்டும் என்று அவர் கூறுகிறார். 'உண்மையான நாகரிகத்துக்கும் முன்னேற்றத்துக்கும் அகந்தை தடையாக இருக்கிறது' என்ற பெரிய இரகசியத்தை உணராதவன் தன்னைப் பற்றியே உணராதவனாகிறான்.

முனிவர்களின் வாழ்க்கை சோதனைகளும் துன்பங்களும் நிறைந்தவைகளாக இருந்தன. அவர்கள் தொல்லைகளுக்கு உள்ளானார்கள். அவர்கள் மிகக் கொடிய துன்பத்தை சகித்துக்கொள்ள வேண்டியிருந்தது. இறைவன் அவர்களைத் துயரமும்

தொல்லையும் நிறைந்த உலைக்களத்தில் இட்டான். தங்கத்திலுள்ள மாசைப் போக்கி, அதை ஒளிரச் செய்வதற்காக உலைக்களத்திலிட்டுக் காய்ச்சுவதைப்போல, முனிவர்களும் அதிக துன்பத்துக்கும் தொல்லைக்கும் உள்ளாக்கப்பட்டார்கள். ஆனால் இவைகளுக்காளான போதெல்லாம் அவர்களிடமிருந்த மூவகைப் பண்புகள் வெளிப்பட்டன. முதலாவதாக துன்பங்களையும் தொல்லைகளையும் இறைவனுடைய அருட் பிரசாதங்களாகக் கருதி அவற்றைப் பொறுத்துக்கொண்டார்கள். பொறுமை, உறுதி, சகிப்புத்தன்மை ஆகியவை தான் எப்பொழுதும் முனிவர்களுடைய பண்பு. அவர்கள் அதிக பொறுமை காட்டியபோது, இறைவன் அவர்களை மேலும் சோதித்தான். அதன் காரணமாக அவர்கள் இறைவனிடம் அதிக நம்பிக்கை காட்டினார்கள். ''நான் இறைவனிடம் நம்பிக்கையை விடமாட்டேன். மிகக் கொடிய துன்பங்களைக் கொடுத்தாலும், உன்னிடம் எனக்குள்ள நம்பிக்கை குறையாது, இறைவா!'' என்று கூறுவார்கள். அத்தகைய வியத்தகு உணர்வுகளைக் கொண்டவர்களாக அவர்கள் விளங்கினார்கள். அவர்களுக்கு இறைவனிடமிருந்த நம்பிக்கை என்றும் எப்பொழுதும் குறையவில்லை. எனவே உனக்கு என்ன நேர்ந்தபோதிலும் அந்த நம்பிக்கையை இழக்கக்கூடாது. அப்பொழுதுதான் உனக்கு நீண்ட ஆயுளும் அளவு கடந்த பேரானந்தமும் கிட்டும்.

போதுமென்ற மனம்தான் முனிவர்கள் அனைவருக்கும் இருந்த மற்றொரு பொதுவான பண்பு. அவர்கள் இறைவனிடம் ஒன்றுபட்டு வாழ்ந்தார்கள். அவர்கள் இறைவன் ஒருவன்தான் தங்களின் மிகவுயர்ந்த செல்வம், உண்மையான கருவூலம், தாங்கள் வாழ்க்கையில் அடைய வேண்டிய ஒரே

பொருள் என்று கருதினார்கள். அவர்களுக்கு வேறு எவ்விதமான ஆசையும் இல்லை. முற்றிலும் ஆசையற்றவர்களாகவே விளங்கினார்கள். இறைவன் ஒருவனிடமே மன அமைதியைக் கண்டார்கள். இந்த ஆசையற்றநிலையின் காரணமாக போதுமென்ற மன அமைதி பெற்று முழுமை பெற்றார்கள். அவர்கள் இறைவனை மிக தூரத்திலுள்ள ஒரு பொருளாக நினைக்கவில்லை. வாழ்க்கையின் ஒவ்வொரு கணமும் அவனையே நாடினார்கள். எவ்வெப்பொழுதெல்லாம் அவர்களுக்கு உதவியும், ஆதரவும், வலிமையும், ஆலோசனையும், ஒளியும் தேவைப்பட்டதோ அப்பொழுதெல்லாம் ஒரு கணமும், தாமதியாமல், ஒரு குழந்தை தன் தாயை நாடுவதுபோல், இறைவனை நாடினார்கள். தங்களுக்கும் இறைவனுக்கும் இடையே இருக்கும் வேறுபாடுகளை எல்லாம் மறந்திருந்தார்கள். இறைவன் தங்களுக்கே உரியவன் என்று உணர்ந்தார்கள். நாமும் நம்முடைய தோத்திரப் பாடல்களில் இந்த நெருக்கத்தைப்பற்றி தினந்தோறும் கூறுகிறோம். ஆனால் அதைப்பற்றிப் போதுமான அளவு தீவிரத்துடன் உணர்வதில்லை. துன்பம் நேர்கையில் பணத்தையோ அல்லது வெளியில் காணப்படும் பொருள்களையோ தான் நம்புகிறோம். ஆனால் நமக்குள்ளே வாசம் செய்யும் இறைவனைப்பற்றிச் சிந்திப்பதில்லை. இறைவன் நமக்குள்ளே உறைகிறான் என்ற உணர்வு நமக்கில்லை. முனிவர்கள் உலகியல் பொருள்களோடு தொடர்பு கொண்டிருந்தாலும், இறைவனோடு எப்போதும் நெருங்கிய தொடர்புள்ளவர்களாக விளங்கினார்கள். எனவே தான் அவர்களைத் தெய்வீக மனிதர்கள் என்று சொல்கிறோம். ஒரு முனிவருடைய கழுத்தை அறுக்க முயற்சிக்கும் ஒருவனைக்கூட அவர் அன்போடு அணைத்துக்கொள்வார். அதுதான் முனிவர் மேற்கொள்ளும் எதிர்ச்செயல். முனிவர்கள் இம்மாதிரியான தெய்வீகப் பண்புகள்

நிறையப் பெற்றவர்கள். சுருங்கச் சொன்னால் ஸ்ரீமத் பகவத் கீதையில் 12-வது அத்தியாயத்திலுள்ள கடைசி எட்டு செய்யுட்களில் கண்ணபிரான் விவரிக்கும் இறைவனால் நேசிக்கப்படும் பக்தன் ஒருவனுடைய பண்புகள் நிறைந்த அமிர்தாஷ்டகமாகிய உணர்வு அவர்களுக்கிருந்தது. அவர்கள் பகவத் கீதையில் இறைவனாலேயே விளக்கமாகக் கூறப்பட்டுள்ள உண்மையான பக்தனுக்கு எடுத்துக் காட்டாக அமைந்திருந்தார்கள். பகவத் கீதையில் இறைவனாகிய் கண்ணனால் வர்ணிக்கப் பட்டுள்ள இலட்சிய புருஷனாகிய பக்தன் அல்லது ஞானிக்குரிய பண்புகள் அனைத்தும் நிறைந்தவர்களாக அந்த முனிவர்கள் விளங்கினார்கள்.

நாம் முனிவர்களை எப்பொழுதும் மறக்கக் கூடாது. அவர்களைப்பற்றி ஒரு கணநேரம் நாம் சிந்திப்போமானால் நாம் தூய்மை அடைவோம். அப்போது அவர்களுடைய வாழ்க்கையில் உள்ள உயர்ந்த ஆற்றலை உணர்ந்து நாம் புத்துணர்ச்சி பெற்று மேன்மை அடைவதை உணர்கிறோம். அவர்கள் தங்களிடமுள்ள எல்லாவற்றையும் துறந்து விட்டதால், தெய்வீக சக்தியால் நிரப்பப் பட்டார்கள். தம்மிடமுள்ள அடக்கத்தின் காரணமாக அனைத்தும் நீங்கித் தூய்மை அடைந்தார்கள். எனவே இறையுணர்வு அவர்களுக்குள்ளே நுழைந்தது. அவர்களிடம் மிகப் பெரிய ஆற்றல் உள்ளது. எனவே அவர்களைப்பற்றிச் சிந்திப்பதாலேயே நாம் வலிமைபெற்று நம்முடைய சிக்கல்களை எல்லாம் தீர்த்துக் கொள்ளலாம்.

அவர்களைப்பற்றி இடைவிடாது சிந்திப்பதால், வாழ்க்கையின் இலட்சியத்தை நோக்கி முயற்சி செய்வோம். ஏனெனில் ''நாங்கள் இதை அடைந்து விட்டோம். எனவே எங்களுடைய எடுத்துக்காட்

டைப் பின்பற்றுவதால் நீங்களும் அதை அடையலாம்,'' என்று அவர்களின் வாழ்க்கையிலிருந்து நாம் காணலாம். ஆகையால் நாம் முனிவர்களுடைய வாழ்க்கை வரலாறுகளைத் தினந்தோறும் படிக்கவேண்டும். அதனால் சிறிது நேரம் செலவழிந்தாலும் அது பயனுள்ளதாகும். முன்னர் கூறியதுபோல் அவர்களுடைய உதாரணத்தைப் பின்பற்ற வேண்டும். நம் மனதிலுள்ள விருப்பு வெறுப்புகளை நீக்கி விட்டு, திறந்த உள்ளத்துடன் முனிவர்களுடைய இயல்பைப்பற்றி ஆழ்ந்து ஆராய்வோமானால், அவர்களுடைய சிறப்பான பண்புகளை உருவாக்கிய இந்த மாணிக்கக்கற்கள் நமக்கு முன்னே தோன்றும். இவைகளை நம் உளளத்தில் பதித்துக் கொள்ளவேண்டும். அவர்களுடைய மேலான இயல்புகளை அக்கறையுடனும் ஆர்வத்துடனும் பின்பற்றுவதும், அவர்களுடைய போதனைகளை அக்கறையுடனும், விருப்பத்துடனும் ஏற்று அவைகளைச் செயல்படுத்த முயல்வதும் தான் அந்த மகாத்மாக்களுக்கு உண்மையானதும் பயனுள்ளதுமான வழிபாடு இயற்றுவதாகும். இம்மாதிரி பின்பற்றும் செயல்தான் நாம் அவர்களுக்குச் செலுத்தும் புகழஞ்சலி ஆகும். நாம் அவர்களுடைய அடிச்சுவடுகளைப் பின்பற்றவேண்டும். அவர்கள் வகுத்துள்ள தெய்வீக வாழ்க்கையை மேற்கொள்வதும், அவர்களைப் போன்றே இலட்சிய வாழ்க்கையும், பண்பும், இயல்பும் உடையவர்களாக நம்மை அமைத்துக் கொள்வதுமே நாம் அவர்களுக்குச் சிறப்பான, பயனுள்ள புகழையும் அஞ்சலியையும் செலுத்துவதாகும்.

---

# 4. மனதை கட்டுப்படுத்துதல்

மனம் பழக்கத்திற்கு அடிமை என்பதுதான் நாம் முதலில் தெரிந்துகொள்ள வேண்டிய விஷயம். வழக்கமான எண்ணத்தால் என்ன வடிவம் கொடுக்கப்படுகிறதோ அதையே மீண்டும் மீண்டும் பின்பற்றுவது மனத்தின் இயல்பு. அதிக அளவில் பலமுறை திருப்பித் திருப்பித் தோன்றும் எண்ணம் மனத்தின் இயல்பான ஒருபகுதியாக அமைந்து விடும். மனதை முழுவதும் அடக்க விரும்பும் அக்கரையுள்ள ஒரு சாதகன் இந்த உண்மையை எப்பொழுதும் மறக்கக் கூடாது. மனதின் இந்த விந்தையான இயல்பைப்பற்றி விவரமாகவும் விளக்கமாகவும் கூறுகிறேன். மருத்துவத் துறையில் பயிற்சிபெற விரும்பும் மாணவன், மருத்துவக் கல்லூரி ஒன்றில் தொடர்ந்து ஆறுண்டு காலம் பயின்ருல், அவன் மனத்தில் எப்பொழுதும், நோய்கள், மருந்துகள், நோய்களைப் போக்கும் முறைகள் ஆகிய எண்ணங்களே நிறைந்திருக்கும். உள்மனத்தில் நிறைந்திருக்கும் எண்ணங்கள் மீண்டும் மீண்டும் மனதின் மையத்தைச் சுற்றியே சுழன்று கொண்டிருக்கும். மற்றவைகளைப்பற்றி நினைப்பதைத் தவிர்த்து, மருத்துவத் துறையைப் பற்றியே அதிகமாக எண்ணுவதில் ஈடுபடும்.

குற்றங்கள், சிவில் வழக்குகள், சட்டத்தின் உபயோகம், நீதிமன்றங்கள், நீதிபதிகள் ஆகிய எண்ணங்களால் மனதில் சிறிதும் ஓய்வின்றி நீண்ட காலம் நிரம்பியிருந்தால் என்ன நேரிடும்? பழக்கத்தின் காரணமாக இப்பொருள்களைப்பற்றியே எண்ணிக்கொண்டிருக்கும் நிலையான இயல்பு மனதில் ஏற்பட்டு விடுகின்றது. துயரத்தைப் பற்றியும் குற்றங்களைப் பற்றியும் எண்ணிக் கொண்டிருப்பதே அதன் இயல்பான நிலையாக

மாறிவிடுகிறது. பொறியியல் அல்லது வேறு எந்தத் துறையைப்பற்றிய நிலையும் இதுதான். பொறியியல் மாணவன் ஒருவனின் மனம் கணிதத்தில் ஈடுபாடு உள்ளது. அதன் அடிப்படையிலேயே அவன் வாழ்க்கைக்கு ஒருவடிவம் அமைக்கப்படுகிறது. அவன் மனம் பொறியியலைப்பற்றியே சிந்திக்கும் முறையில் அமைகிறது. பொறியியலைத் தவிர வேறு எந்த பொருளைப்பற்றி எண்ணினாலும் அது அவ்வளவு பயனுள்ளதாக இருக்காது. ஒரு மருத்துவர் சாதனையை மேற்கொண்டு தியானத்தில் ஈடுபட முயன்றால், மருத்துவமனைகள், நோயாளிகள் ஆகியவற்றைப்பற்றிய எண்ணங்கள் அடிக்கடி தோன்றி அவர் கவனத்தை ஈர்க்கும். ஒரு வியாபாரி யோகத்தில் மனதைச் செலுத்த விரும்பினால் இலாப நஷ்டங்கள், சந்தையில் பொருள்களின் விலையிலுள்ள ஏற்றத்தாழ்வுகள் ஆகியவற்றைப்பற்றிய எண்ணங்கள் அவருடைய மன அமைதியைக் குலைக்கும். இதிலிருந்து நாம் நம்முடைய மனதை அடக்கி, அதை எவ்வாறு வெற்றிகரமாக ஒருமுகப்படுத்துவது என்பதற்குரிய குறிப்பு ஒன்று கிடைக்கிறது. அந்தக் குறிப்பு யாது? உலகியல் வாழ்க்கையில் சுறுசுறுப்புடன் இயங்கிக் கொண்டிருக்கும்போதும் உன்னுடைய அன்றாடப் பணிகளைச் செய்துகொண்டு இருக்கும் போதும், நீ தியானம் செய்ய விரும்பும் பொருளைப் பற்றிய எண்ணங்களை உன் மனதில் நிரப்பிக் கொள்ள வேண்டும். நீ ஒரு பக்தன் என்று வைத்துக்கொள்வோம். தன்னுடைய மனதை அடக்கியாண்டு, தன் இலட்சியத்தைப்பற்றிய— இராமபிரான், கண்ணன், சிவபெருமான், தேவி, இயேசுபெருமான் அல்லது அல்லா ஆகியவர்களைப் பற்றிய—தியானத்தில் முன்னேற்றம் அடைவதற்கு அவன் கையாளும் சிறந்தவழி எது? அவன் மேற்கொள்ளும் பயிற்சியை தியானத்தில் அமரும் நேரத்

தில் மட்டும் பயன்படுத்தக் கூடாது. தினந்தோறும் காலையிலும் மாலையிலும் தியானத்தில் அமர்வதாக இருந்தால், நீ எந்தப்பொருளைப்பற்றித் தியானம் செய்கிறாயோ அதைப்பற்றிய அடிப்படை எண்ணங்களை நாள் முழுவதும் உன் மனதில் இருத்திக்கொள்ள வேண்டும். ஒரு பக்தன் இராமன், கிருஷ்ணன் அல்லது தன் இஷ்ட தெய்வத்தைப்பற்றி இடைவிடாது எண்ணிக் கொண்டே இருக்கிறான். எனவே நீ ஒரு கணம் கூட இறைவனை மறக்கக் கூடாது. பிரார்த்தனை சமயத்தில் தான் அவனைப்பற்றி எண்ண வேண்டும் என்று கருத வேண்டாம். தியானத்தின் மையக் கருத்து உன்னுடைய உலகியல் வியவகாரங்களின் போதும் கூட உன் நினைவில் இருக்க வேண்டும். தியானத்தின் அடிப்படையான எண்ணம் எப்போதும் உன் மனதிலிருந்து மறையக் கூடாது. சுறுசுறுப்பான வேலை நிறைந்த சமயத்திலும் அது மனதில் இருக்க வேண்டும். தியான நேரத்தைப்போல அவ்வளவு தீவிரமாக இல்லை என்றாலும் இடைவிடாது நினைவில் வைத்திருக்க வேண்டும். தீசியஸ் என்ற கிரேக்க வீரனைப்பற்றி நீங்கள் படித்திருக்கலாம். அவன் மாயவழி அமைந்த ஒரு மண்டபத்துக்குள் சென்று ஓர் அரக்கனைக்கொன்று விட்டு மீண்டும் வெளியே வர வேண்டி இருந்தது. அந்த மண்டபத்துக்குள் செல்லும் எவரும் திரும்பி வெளியே வரமுடியாதபடி அவ்வளவு சிக்கலான வழிகளுடன் அமைக்கப்பட்டிருந்தது. அவனுடைய தோழி அவனிடம் நூல்கண்டு ஒன்றைக் கொடுத்து ''அந்த அரக்கன் மண்டபத்தின் மையத்தில் இருக்கிறான். அங்கு செல்லும்போது நூல் கண்டை அவிழ்த்து நூலை விட்டுக்கொண்டே செல். மண்டபத்தின் வாயிலோடு நூலின் தொடர்பு அறுபட்டுப்போனால் உன்னால் மீண்டும் வெளியேவர முடியாது'' என்று சொன்னாள். இந்தத் தந்திரம் அவனுக்குத் தெரிவிக்கப்பட்டதால், அரக்கனைக்

கொன்றுவிட்டு மீண்டும் வெளியேவர அவனுல் முடிந்தது. இவ்விதமாகவே தியானத்தின் நூலேயும் நீ தவர விடக்கூடாது. காலேயில் தியானம் செய்து விட்டு அந்த நினேவைத் தொடர்ந்து வைத்திரு. நடுப்பகலில் தியானத்தில் அமரும் போது, அந்த எண்ணம் மீண்டும் தொடர்கிறது. தூங்கும் போதுகூட அடிமனமானது தியானத்தில் தொடர்ந்து ஈடுபடுகிறது. தூக்கத்தில் கனவு காணும்போது தியானத்தின் அடிப்படை உணர்வு தோன்றி, கனவை மாற்றி அமைப்பதிலிருந்தே இதைக் காணலாம். யோகத்தில் ஈடுபடுவதற்கு முன்னுல், பயங்கரக் கனவுகள் இரவில் தோன்றுமாஞல், இறைவனேப் பற்றி எண்ண முயற்சி செய். அதே கனவு சற்று குறைந்த அளவில் தோன்றலாம். திடீரென்று உன்னுடைய கனவுக்கு இடையில் ''இறைவன் என்னுடன் இருக்கிருன். எனவே எனக்குள்ளே வேறெதுவும் வரமுடியாது.'' என்ற எண்ணம் தோன்றும். கனவில்கூட இந்த மனவுறுதி தோன்றும். அதனுல் உனக்கு அச்சத்தை உண்டாக்கும் அனுபவத்தின் தீவிரம் குறைந்து, முடிவில் மறைந்து விடும். ஸ்மரணம் அல்லது நினேவாற்றல், கனவு நிலே உறக்க நிலே ஆகிய இரண்டிலும் கூட மறையாமலிருப்பதோடு, சில நேரங்களில் பயனுள்ள சிறப்பான வடிவிலும் வெளிப்படுகிறது என்பதை இதிலிருந்து உணரலாம். விழிப்பு, கனவு, உறக்கம் ஆகிய மூன்று நிலேகளும் தியானத்தை தொடர்பறுது வைத்துள்ளன என்பதையும், மனதின் ஒருபகுதி இயல்பான வேலேயைத் தொடர்ந்து செய்து கொண்டே இருக்கின்றது என்பதையும் அறியலாம். இந்த நுண்ணிய முறையை நால்வகை யோகங்களும் சிறப்பாக உருவாக்கியுள்ளன. இதைச் செய்து முடிப்பதற்கு பல்வேறு வழிவகைகளேக் கூறியுள்ளன. இந்தவழியை வேதாந்திகள் ''பிரம்மப்யாசம்'' என்று சொல்

கிறார்கள். பிரம்மப்யாசத்தின்போது அதற்குரிய ஆசனத்தில் அமர்ந்து உருவமற்ற பிரம்மத்தைத் தியானம் செய்வதோடு, வேலை செய்யும் போதும், நீதான் பிரம்மம் என்ற எண்ணத்தை உடையவனாகவே இருக்கிறாய். இது 'பிரம்ம சிந்தனை' என்றும் சொல்லப்படுகிறது. தியானத்தில் அமர்வதற்கும், எப்பொழுதும் தியான உணர்வை உள்ளே வைத்திருப்பதற்கும் மிகச் சிறிதளவே வேறுபாடு உள்ளது. தியானம் என்பது தீவிரமானது; மிகவும் ஆழ்ந்து இருப்பது. புலனுணர்வுப் பொருள்களின் தொடர்பிலிருந்து புலன்களை உள்ளடக்கி, புலன்களின் வெளிப்படைச் செயல்களை ஒடுக்கி, சிந்தனையில் ஆழ்ந்து ஈடுபட்டிருப்பதுதான் தியானம். சிந்தனை என்பது புலன்களை முற்றிலும் ஒடுக்குவதல்ல. புலன்கள் வெளியுலகத்தை உணர்கின்றன. புலன்கள் வெளியே பொருள்களை நாடிச் செல்பவை. வெளியுலகத்திலுள்ள பொருள்களுக்கிடையே செயல் பட்டாலும் உன் நினைவு உனக்கு இருக்கின்றது. இதையே ''ஆத்ம சிந்தனை'' என்றும் சொல்வார்கள். இது ஒரு மிகவும் பயனுள்ள வழியாகும். விழிப்பு நிலையிலும் இடையறாத தொடர்புடைய ஒரு இயல்பாக மாறும். மனப் பழக்கம் என்னும் விதியை அனுசரித்து இருக்கிறது. தியானத்தின் இலட்சியத்தை இடையறாது நினைவில் இருத்திக் கொள்ள முயலும்போது என்ன ஏற்படும்? மருத்துவம், சட்டம், பொறியியல் ஆகிய துறைகளில் பயிலும் மாணவர்களிடையே நிகழும் விந்தையான விளைவே இங்கும் ஏற்படுகின்றது. தியானத்தில் அமரும் போது என்ன நினைவு வருகின்றது? மனம் எதைப்பற்றி நினைக்க முயலுகிறது? பகற் காலத்தில் இடைவிடாது அதனிடத்திலிருந்த நினைவுகளே அவை. அப்பொழுது மனம் எதைப் பற்றி எண்ணியது? தியானத்துக்குரிய பொருளான இறைவனைப்பற்றியே மனம் நாள்முழுவதும்

எண்ணிக் கொண்டிருந்தது. தியானத்தில் ஈடுபட விரும்பிப் பயிற்சியை மேற்கொள்பவர்கள் இதையே ஒரு சிறப்பான வழியாக அல்லது பயிலும் முறையாகக் கொண்டு இதை மேலும் மேலும் பெருக்கிக் கொள்ள வேண்டும். ஒரு பக்தன் இறைவனை எந்நேரமும் நினைத்துக் கொண்டே இருக்க விரும்புகிறான். இதுவே ஸ்மரணை என்று சொல்லப் படுகிறது. இறைவனை மனதால் ஜெபம் செய்கிறான். சிவ பக்தனானால் அலைந்து திரிந்து கொண்டிருக்கும் போதும், உடலாலும் மனதாலும் வேலை செய்யும் போதும், ''ஓம் நமசிவாய! ஓம் நமசிவாய!'' என்று இந்த உயிரோட்டம் அவனுக்குள்ளே ஓடிக்கொண்டே இருக்கின்றது. இராம பக்தனானால், ''ஸ்ரீராம்'' என்ற இராம நாம ஜெபம் மனதிற்குள் நடந்து கொண்டே இருக்கின்றது. யோகப் பயிற்சியில் தியானம் செய்யவேண்டிய பொருளைப்பற்றி எப்பொழுதும் இடைவிடாது நினைத்துக்கொண்டே இருக்கும்படி மனதைப் பழக்குவதற்கு இந்த பல்வேறு வழிகள் உதவுகின்றன. யோகப் பயிற்சியில் ஈடுபடுபவருக்கும், மனதை ஒருமுகப்படுத்துவதிலும் தியானத்திலும் முன்னேற்றம் பெற விரும்புபவருக்கும் இந்தப் பழக்கம் ஒரு பெரிய ஒப்பற்ற உடைமையாகும். இந்த இடைவிடாத நினைவை ஏற்படுத்திக் கொள்வதற்கு ஜெபத்தோடு வேறொரு வழியும் இருக்கின்றது. ஒவ்வொரு பொருளையும் இறைவனாகவே எண்ணும் வழிதான் அது. தான் பார்க்கும் பொருள்கள், சுவைக்கும் பொருள்கள், கேட்கும் பொருள்கள் அனைத்தும் இறைவனே என்று உணர்வதால், மனதில் இராமன் அல்லது இறைவனைப்பற்றிய நினைவால் நிரப்பிக் கொள்கிறான். மேலும், கீழும், வலப்பக்கத்திலும், இடப்பக்கத்திலும் எல்லாம் இராமனே. எல்லாப் பொருள்களிலும் இறைவனையே பார். இவ்வுலகிலுள்ள அசையும் பொருள்கள், அசையாப்

பொருள்கள் அனைத்தும் இராமனே. எனவேதான் இராமனையே எல்லாப் பொருள்களிலும் காண்கிறான். அதனால் உலகிலுள்ள பொருள்கள் அனைத்தும் இராம மயமாகின்றன. ''உலகமுழுவதும் சீதாராம மயத்தைத் தவிர வேறெதுவுமில்லை என்று உணர்ந்து, உன்னையே மீண்டும் மீண்டும் கூப்பிய கரங்களுடன் தரையில் வீழ்ந்து வணங்குகிறேன்'', என்று துளசிதாசர் கூறுகிறார். காற்றிலும், நீரிலும், ஆகாயத்திலும், மூச்சிலும், எல்லாவற்றிலும் இறைவனையே காண்கிறார். பகவத் கீதையின் பதினோராம் அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ள போதனையும் இதுதான். ''இறைவன் மேலே இருக்கின்றார். நம் அருகிலும் இருக்கின்றார்'' நம் அருகில் இறைவன் இருக்கின்றார் என்ற உண்மை தான் அர்ச்சுனனுக்கு உணர்த்தப்பட்டது. இறைவன் அர்ச்சுனனுக்கு விஸ்வரூப தரிசனத்தைக் காட்டுகிறார். அர்ச்சுனன் சர்வவல்லமை படைத்த இறைவனையே எங்கும் காண்கிறான். இறைவனைத் தவிர வேறொன்றுமில்லை. இதுவே விஸ்வரூப தரிசனம் எனப்படும். மனதை மிகவுயர்ந்த இலட்சியம் ஒன்றையே காணும்படிச் செய்யும் விந்தையான முறை இதுவே. மனமே மெதுவாக அந்த வடிவத்தைப் பெறுவதற்கு முயலுகிறது. இப் பயிற்சியை விடாது மீண்டும் மீண்டும் மேற்கொண்டால், அவனுடைய புலன்கள் எங்கு சென்றாலும், அவைகள் இறைவனை விட்டுப் பிரிய மாட்டா. புலன்கள் எங்கு செல்கின்றன? அவைகள் இறைவனிடம் செல்கின்றன. அவன் எப் பொருளைப் பார்த்தாலும், அதில் இறைவனையே பார்க்கிறான். அவன் கண்கள் பார்க்கும் போதெல்லாம் இறைவனையே பார்க்கிறான். அவன் எதையாவது கேட்டால், அது இறைவன் குரலாகவே அவனுக்கு ஒலிக்கின்றது. புலன்கள் எப்பக்கம் சென்றாலும், அவைகள் இறைவனை நோக்கியே

செல்கின்றன. எனவே புலன்களால் அவனுக்குத் தடைகள் இல்லை. புலன்கள் கூட அவன் இறைவ ஞேடு தொடர்பு கொள்வதற்கு உதவுகின்றன. தடைகளேயும் வெளியுலகக் கவர்ச்சிகளேயும் முற்றி லும் நீக்குவதற்கு இது விந்தையான மிகச்சிறந்த வழி. ஏனெனில் மனிதன் இறைவன் ஒருவனேயே காண்கிருன். அவனுடைய உலகியல் வாழ்க்கை யும் தொடர்ச்சியான சிந்தனேயோடு இணேந்துள் ளது. சீக்கியர்களும் நாமத்தையும் ஸ்மரணேயை யும் பயன்படுத்துகிருர்கள். மனத்தளவிலும் உணர்ச்சியாலும் ஏற்படும் மனப்பாங்கு கர்ம யோகி ஒருவன் ''இறைவன் எப்பொழுதும் தன் ஞேடு இருக்கிருன்'', என்ற உணர்வைப்பெற உதவுகிறது. கர்மயோகியிடமுள்ள அடிப்படை யான் உணர்ச்சியோடு கூடிய மனப்பாங்கு இந்த முறையைத் தானுகவே உண்டாக்குகிறது. இல்லே யெனில் ஒருவர் எவ்வாறு இறைவனேக் காண முடியும்? ஆனுல் இறைவனே மட்டும் காண முயலும் போது என்ன நேரிடுகிறது? கர்மயோகி இறைவனே எப்பொழுதும் மறவாமல் நினேத்துக் கொண்டு இருப்பதாலும், பக்தன் இறைவனுடைய திருநாமத்தைச் சொல்லிக்கொண்டே இருப்ப தாலும், ஞானயோகி எங்கும் நிறைந்த பிரம் மத்தை இடைவிடாது தியானித்துக் கொண்டிருப்ப தாலும், இராஜயோகி தன் மனதை எப்பொழுதும் பிரத்யாஹாரத்தில் நிலேத்திருக்கச் செய்வதாலும், தத்தம் மனதின் எண்ணப் பழக்கத்தை மாற்ற முடிகிறது. இராஜயோகி தன் மனதை ஒரு முகப்படுத்துவது கடினமாக இருக்காது. வழக்கமான பிரத்யாஹார நிலே அவனிடத் தில் உறுதியாக அமைந்துள்ளது. மனம் வெளி யுலகப் பொருள்களே நாடிச் செல்வதை அனுமதிக் காத இந்த வழியைக் கற்றுத் தேர்ந்தவனுக இருக்கிருன். பிரத்யாஹாரத்தில் பூரணமாக

நிலைபெற்றவுடன், மனதை ஒருமுகப் படுத்துவதில் ஈடுபடுகிறான். பிரத்யாஹாரத்தில் நிலைபெற்று விடுவதால் இராஜயோகி ஒருவனுடைய மனம், அவன் வேறு வேலைகளைச் செய்துகொண்டிருக்கும் போதுகூட, வெளியுலகப் பொருள்களிடம் முற்றிலும் ஈடுபடுவதில்லை. ஏனெனில் அவனுடைய நோக்கம் மாறுபட்டிருக்கின்றது. அவன் வெளியுலகப் பொருள்களை நிழல்களாகவே நினைக்கிறான். இராஜயோகிக்குப் பிரத்யாஹாரமும், பக்தனுக்கு ஸ்மரணையும், நாம ஜெபமும், வழிபாட்டு மனப்பான்மையும், வேதாந்திக்கு பிரம்ம சிந்தனையும் ஆகிய இந்த முறைகளால்தான் மனதின் எண்ணப் பழக்கம் மாற்றப்படுகிறது. மனதில் ஒரு புதிய நினைவுப் பழக்கம் உண்டாகிறது. உலகியல் சார்பான நினைவு பழக்கத்திற்கு மாறாக தெய்வீக நினைவுப் பழக்கத்தை மனிதன் பெறுகிறான். இந்தப் பழக்கத்தைப் பெற்றபின், தியானத்தில் அமரும் போது தியானத்திற்கு விரோதமான எண்ணங்கள் சாதகனிடம் தங்களுக்குள்ள தொடர்பை படிப் படியாக இழக்கின்றன. அவைகள் மறையத் தொடங்கி, விரைவில் மனம் ஒருமுகப்படும் நிலை உண்டாகிறது. அப்பொழுது தோன்றும் எண்ணங்கள் தியானத்துக்குரிய பொருளை யொத்த இயல்புடைய எண்ணங்களாகவே இருக்கும். ஒருமுகப் படுத்தும் ஆற்றலின் தீவிரத்தைக் குறைத்தாலும், மீண்டும் ஒருமுகப்படுத்தும் செயல் தொடங்குகிறது. அந்த செயலின் அடிப்படையான உயிரோட்டத்தில் தடை ஏதும் இருக்காது. சிறிது நேரம் மங்கியிருந்தாலும், ஒருபோதும் தடை ஏற்படாது. நீ பக்தனாகவோ, வேதாந்தியாகவோ, கர்மயோகியாகவோ, இராஜயோகியாகவோ எதுவாக இருந்தாலும், இந்தப் பயிற்சியை விடாது மேற்கொள்ள வேண்டும்.

———

## 5. சாதனை

நாம் இவ்வுலகில் தோன்றியதன் நோக்கமே சாதனைதான். பூவுலகம் ஒன்றில்தான் ஆன்மீகத் தெளிவுக்காக சாதனை மேற்கொள்ள முடியும். எனவேதான் இது சாதனை பூமி எனப்படுகிறது. மற்ற உலகத்தில் இது இயலாத காரியம். கீழே உள்ள நரகலோகத்தில் ஒருவர் செய்த தீயகர்மாக்கள், தவறுகள் ஆகியவைகளுக்கான பலன்களையும், பாவச் செயல்களுக்கான தண்டனைகளையும் அனுபவித்துக்கொண்டிருக்க வேண்டும். மேலுலகம் அல்லது சுவர்க்கம் என்பது உயிர்கள் தாங்கள் செய்த நற்செயல்களின் பயன்களை அனுபவிப்பதற்காக ஏற்பட்டது. இவை இரண்டில் எங்கு சென்றாலும் மனிதன் மீண்டும் தான் முன்பிருந்த பூமிக்கே வரவேண்டும். ஆனால் பூமியில் வாழ்வாங்கு வாழ்ந்து, நிலையான பேரின்ப வீட்டிற்கு நேரே செல்லலாம். துன்பமும் வருத்தமும் பிறப்பும் இறப்பும் மலிந்த இந்த உலகிற்கு மீண்டும் திரும்பி வரவேண்டியதில்லை.

எனவே சாதனை இன்றியமையாதது. சாதனையின் மூலம் ஆன்மீகத் தெளிவு உண்டாகிறது. சாதனை என்றால் என்ன? சாதனை என்பது நன்னெறியில் அல்லது இறைவனோடு தொடர்புள்ள வகையில் வாழ்வதாகும். நீ உண்மையில் எதுவோ அதை வெளிப்படுத்தி, அதை தெளிவாக எடுத்துச் சொல்லும் வகையில் வாழ்வதுதான் சாதனை. நீ எப்பொழுதும் அப்பழுக்கற்ற தூய்மையுடன் இருக்கிறாய். எனவே உன் தூய்மையான, குற்றமற்ற இயல்பை உன் எண்ணங்கள், சொற்கள், ஆசைகள், அன்றாட வாழ்க்கையின் உள் நோக்கங்கள் ஆகியவற்றில்

வெளிப்படுத்து. அதைப்பயின்று, அம்மாதிரியே வாழ்ந்து, அதையே மற்றவர்களிடம் பரப்பு. அது தான் சாதனே. நீயே உண்மை; எல்லாவற்றுக்கும் மேலான சத்தியம். இந்த உண்மையை வெளிப் படுத்து. உன் உள்ளத்திலிருந்து பொய்மையை அகற்றிவிடு. உண்மையின் உருவமாகவே மாறி விடு. உன் உண்மையான இயல்போடு இரு. அதற்கு மாறுன வாழ்க்கையை அமைத்துக் கொள் ளாதே. இதுதான் உண்மையான சாதனே. எண் ணம், சொல், செயல் ஆகிய மூன்றிலும் தெய்வீக மாக இருப்பதே தெய்வீக வாழ்க்கைக்கு அழைத் துச் செல்லும் நேரடியான பாதையாகும்.

எண்ணம், சொல், செயல் ஆகிய மூன்றிலும் தெய்வீகத் தன்மை நிரம்பி அதனுல் தெய்வீகத் தன்மையோடு வாழும் வாழ்க்கையே மேலான சாதனேயாகும். தெய்வீகமாக வாழும் வாழ்க்கை யின் மூலம், வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் உனக்குள்ளே இருக்கும் தெய்வீகத் தன்மையை வெளிப்படுத்தி, இந்த தெய்வீக அனுபவத்தைப் பெற்று மகிழ்வாயாக. அதன் விளேவாக பெரு மகிழ்ச்சியுடன் கீழ்க்கண்டவாறு உறுதியாகச் சொல்வாயாக: ''ஓம், எல்லா நிலேகளிலும் வாழ்க்கை, தெளிவு, பேரானந்தம் ஆகியவை எல் லாம் நானே!'' இதற்கான முயற்சியை மேற் கொண்டு உன் பிறப்புரிமையைக் கோரிப்பெறு. எந்த முயற்சியும் அளவுக்கதிகமானதல்ல. மகிழ்ச்சி யுடனும், நம்பிக்கையுடனும், இந்த இலட்சி யத்தை நோக்கிப் பொறுமையுடன் செயல்படு. அவ்வாறு செயலாற்றும்போதுகூட, இந்த உள் ளுணர்வையும், விழிப்புணர்ச்சியையும் கை விடாதே. எல்லா விஷயங்களிலும் ஒவ்வொரு கணமும் அதையே வற்புறுத்து. சந்தர்ப்பங்களே வெற்றிகொள். மனதை வென்று, ஆசைகளே

அடக்கி, விதியை வெற்றி கொள்வாயாக. ஏனெனில் நீதான் தலைவன்.

நான் மீண்டும் சொல்கிறேன். நீ அதற்காகச் செயல்பட வேண்டும். சிகரத்தை அடைய வேண்டுமானால் குன்றின் மேலே ஏறிச் செல்ல வேண்டும். உச்சியை அடைந்தபின், உழைப்பெல்லாம் ஒரு குழந்தையின் விளையாட்டாகக் காணப்படும். அதுவரை படிப்படியாக, மிகவும் பாடுபட்டு மேலே ஏறிச்செல்ல வேண்டும். விழிப்புணர்ச்சியை உறுதியாகப் பற்றிக்கொண்டு ஏற்கனவே உச்சியில் இருப்பதாக எண்ணிக்கொள். ஆனால் மேலே ஏறிச் செல்வதை நிறுத்திவிடாதே. படிப்படியாக, மேலே ஏறிச்செல். இதுதான் சாதனையின் இரகசியம்.

நற்பண்புகளைப் பெருக்கிக் கொண்டு, நல்ல, தூய, உண்மையான பாதையின் வழியே பயணம் செய்து உன்னை எதிர்நோக்கி இருக்கும் ஒளிமயமான இலட்சியத்தை அடைவாயாக. அது உன் பிறப்புரிமை. அதை இப்பிறவியிலேயே நீ கோரிப் பெற்று அனுபவிக்கலாம். தள்ளிப்போடாதே. உடனே எழுந்து செயல்படு. இந்த வாழ்க்கையில் நீ முழு வெற்றியை அடையவேண்டும் என்பதற்காக இந்தத் தொண்டன் எப்பொழுதும் பிரார்த்தனை செய்து கொண்டிருப்பான். ஆன்மீகத் தெளிவு என்னும் தெய்வீக அருள் உனக்கு ஏராளமாகக் கிட்டட்டும்.

---

## 6. சாதனையில் தடைகளை வெல்வதெப்படி?

உன் உள்ளமாகிய மலர்வனத்தில் நற்குணங்களாகிய மலர்களைப் பயிர் செய். நற்பண்புகளிலிருந்து புனிதமும், புனிதநிலையிலிருந்து தெய்வீகமும், தெய்வீக நிலையிலிருந்து இறையுணர்வும் பெற்று மேன்மை அடையலாம். தூய்மையற்ற நிலையிலிருந்து தூய்மையையும், தூய்மையிலிருந்து புனிதத் தன்மையையும், புனிதத் தன்மையிலிருந்து ஆன்மீக அனுபவங்களையும்பெற்று உயர்வுபெற முடியும்.

பரதகண்டத்தில் அத்வைதக் கொள்கையை நிலைநாட்டிய மகானாகிய சங்கராச்சாரியார், தனியொரு ஆன்மாவானது உயர்வுபெற்று பரப்பிரம்மத்தோடு இணையும் அனுபவத்தைப்பற்றி விவரிக்கும்போது, சாதனையாகிய நெறியில் கடக்கப்பட வேண்டிய தடைகள் மூன்றுவிதமானவை என்று கூறுகின்றார். முதலாவதாக நாம் வசிக்கும் இந்த பூதவுடலோடு நம்மை முழுவதும் ஐக்கியப்படுத்திக் கொள்வதால் ஏற்படக்கூடிய மயக்க நிலையாகும். இந்த கட்டுண்ட தன்மையால் தான் மயக்கநிலை ஏற்பட்டுள்ளது. ஏன்? விவரிக்க வொண்ணாத ஒரு விந்தையான காரணத்தால், இந்த உடலாகிய வீட்டில் வசிக்கும் நாம் முற்றிலும் அதனோடு ஒன்றுபட்ட உணர்வுமிக்கவர்களாய் விட்டதால், "நாமே இந்த உடல்" "இந்த உடல் தான் நாம்" என்று எண்ணிக்கொண்டு இருக்கிறோம்.

"நான் இந்த உடலல்ல," என்று எவ்வளவு முறை சொன்னபோதிலும், அதைச் சொன்ன மறுகணமே நம்முடைய ஒவ்வொரு செயலும், நம்

உண்மையான வாழ்க்கைச் செயல் முறையும், நம்முடைய உடலோடு ஒன்றுபட்ட உணர்வை வலியுறுத்துவதாகவே இருக்கின்றது. அதை வார்த்தைகளால் அழுத்தந் திருத்தமாகச் சொல்லிக்கொண்டே, செயலால் உடலோடு ஒன்று பட்ட உணர்வையே வெளிப்படுத்துகிறோம். நீயே இதைச் சோதனை செய்து பார்க்கலாம். உன்னையே நன்றாக உற்றுக் கவனி. ''நான் இந்த உடல் அல்ல. நான் ஆன்மா தான்,'' என்று நாவால் அழுத்தம் திருத்தமாகச் சொல்லிக்கொண்டும், மனதால் எண்ணிக்கொண்டும், பகுத்தறிவால் ஆராய்ந்து முடிவு செய்து கொண்டும் இருக்கும்போது, ஆன்மீகத் தெளிவுபெற்று உயர்ந்தநிலை அடைந்து விட்டதாக நீ எண்ணிக்கொண்டிருக்கலாம். அந்த நேரத்தில் யாராவது அங்கு வந்து, ''அறிவற்ற வனே! இங்கே உட்கார்ந்துகொண்டு உன் நேரத்தை வீணாக்கிக் கொண்டிருக்கின்றாயே. எழுந்து சென்று ஏதாவது வேலை செய்யக்கூடாதா?'' என்று கேட் டால், உடனே நீ வெகுண்டெழுந்து அவன்மேல் மிகவும் கோபமடைகிறாய். உன் வேதாந்தம் எல்லாம் மறைந்து விடுகிறது. நீண்டகாலப் பழக் கத்தின் காரணமாக உன் அறிவு தன்னிலை மறந்து திடீரென்று கோபத்துக்கு அடிமையாகி விடுகின்றது. அந்த மனிதன் உன் உடலைப்பார்த்து முட்டாள் என்று சொன்னவுடன், அவன் உன்னையே முட்டாள் என்று சொல்கிறான் என்று உடனே முடிவுக்கு வந்து விடுகிறாய். உன் உடலைப் பார்த்து, அதற்கொரு பெயரையும் உருவத்தையும் கொடுத்து அதை, ''நீ ஒரு முட்டாள்'' என்று சொல்கிறான். அதைக்கேட்டு உடனே மனதுக்கும் உடலுக்கும் அப்பாற்பட்டதும், இருவேறுபட்ட உணர்ச்சிகளைக் கடந்ததும் சச்சிதானந்த ஸ்வரூபமு மான அமர ஆன்மா கோபம் கொண்டு, சண்டை யிடத் தயாராகிறது. மனதில் கொதிப்பும் குழப்ப

மும் உண்டாகிறது. ''இவனுக்கு எப்படி பதிலடி கொடுப்பது?'' என்ற எண்ணமே உனக்கேற் படுகிறது. கோபம் பொங்கி எழுவதனல், மிக்க மனக் கொதிப்புடன் அவனை முகத்திலறைய வேண்டும் என்று விரும்புகிருய். ''நான் அமைதி யும் பேரானந்தமும் நிறைந்த சச்சிதானந்த ஆன்மா. உடல், மனம், அறிவு, பெயர், உருவம் ஆகியவைகளுக்கு அப்பாற்பட்டவன், நான் முழுமை பெற்றவன், எல்லாம் நிறைந்தவன், எனக்கு இணையானவர் எவருமில்லை. எனவே என்னை எவரும் எதுவும் சொல்ல முடியாது. என்னைத்தவிர எவரும் இல்லை. சச்சிதானந்தம் ஒன்றே நிலையானது. பேரானந்தமும் நானே,'' என்ற உண்மையை நீ முற்றிலும் மறந்து விட்டாய்.

உன் அழகை கோரமாகவும், அஹிம்சையைத் துன்பமாகவும், உயர்ந்த பண்பின் உண்மையைத் தாழ்ந்த பொய்மையாகவும், தெய்வீக வாழ்க்கை யின் மூன்று அடிப்படை இயல்புகளான உண்மை, தூய்மை, பரிவு ஆகியவைகளுக்கு விரோதமாகவும் மாறச் செய்து சச்சிதானந்த ஆன்மாவாகிய உன்னை அதற்கு முற்றிலும் மாறுன ஒன்ருக மாற்றிவிடும் இயல்புள்ள இந்த திடீரென்று தோன்றும் கோபம் ஒரு தூய்மையற்ற பண்பாகிய மலம் எனப்படும். கோபம், பேராசை, காமம், தன்னலம், கர்வம், மயக்கம், உடல், பெயர், உருவம், அதன் ஆசைகள் ஆகியவற்றின்மேல் பற்று, பொருமை ஆகிய மனித இயல்பின் தூய்மையற்ற பண்புகள் ஆகியவை கள் அவ்வப்பொழுது தோன்றி மனதை அடக்கி வென்று விடுகின்றன. அவைகள் உன் மனதில் நிறைந்திருப்பதால் சச்சிதானந்த உணர்வு உன்னிட மிருந்து மறைக்கப்படுகிறது. அப்போது அற்பத் தனம், நேர்மையற்ற தன்மை, சகிப்புத்தன்மை இன்மை, கர்வம், ''இவன் எப்படி என்னிடம்

இவ்வாறு பேசலாம்?'' என்னும் எண்ணம் ஆகியவை உன் மனதில் தோன்றுகின்றன.

தூய்மையற்ற பண்புகளாகிய இவைகள் மலங்கள் எனப்படும். இவை மனித இயல்பின் அடிப்படைக் குறைகள். உன்னுடைய இயல்பின் உயர்ந்த நிலையை அடைய விரும்பினால் அவைகளை முற்றிலும் நீக்கவேண்டும். இந்தக் குறைகள் மனிதனுக்கு இடைவிடாது இன்னலைக் கொடுத்துக் கொண்டே இருக்கும். இவைகள் முழுமூச்சுடன் செயல்பட்டுக் கொண்டிருக்கும்வரையில், முற்றிலும், தூய்மையான ஆன்மா நம்முடைய உணர்வில் எவ்வாறு வெளிப்படும்?

எனவே ஆன்மாவைப்பற்றிய தெய்வீகக் கொள்கையை முற்றிலும் மறுத்து ஒதுக்கும் தீய பண்புகளாகிய இந்த மலங்கள்தாம் முதல் தடை என்று சங்கராச்சாரியார் கூறுகிறார். இந்தத் தீய பண்புகளால் மனதில் எப்பொழுதும் குழப்பமும் கிளர்ச்சியும் நிறைந்திருக்கும். இவை மனதை அமைதியாகவும் அடக்கமாகவும் இருக்க அனுமதிக்க மாட்டா. இந்தப் பண்புகள் மனதை வெளியுலகில் ஆன்மீகத் தொடர்பற்ற செயல்களுக்கு ஒவ்வொரு கணமும் இழுத்துச் சென்று கொண்டே இருக்கும் வரை, மிகவுயர்ந்ததாகிய பரம்பொருளைப்பற்றி இடைவிடாது எண்ணிக் கொண்டிருக்க உன்னால் முடியாது.

தூய்மையற்ற பண்புகளின் காரணமாக, மனம் ரஜஸ், தமஸ் என்னும் தாழ்ந்த பண்புகளால் நிறைந்திருக்கும். எப்பொழுதும் வெளியிலேயே நாட்டமுடையதாகவும், அமைதியற்ற நிலையிலும், கிளர்ச்சி நிறைந்தும் இருக்கும். இதுவே விட்சேபம் என்னும் இரண்டாவது தடையாகும். இதையும் நாம் வெல்லவேண்டும்.

மனதின் ஆழத்தில் ஆவரணம் என்னும் மூன்று வது தடை இருக்கின்றது. உன்னுடைய உயர்ந்த தெய்வீக இயல்பை முற்றிலும் மறந்துவிட்டு, திருப்பித்தாக்க விருப்பத்தோடு ஒரு கோபமுள்ள மனிதனாகத்தானிருந்தாய். உன்னுடைய மேன்மை யான தெய்வீகப் பிறவியைப்பற்றிய உண்மையை மறக்கச் செய்து, ஆன்மீக உணர்வுக்கும் கோபத்தை உண்டாக்குவதும் உடல், மனம் ஆகியவற்ருேடு கட்டுண்டிருப்பதுமான உணர்வுக்குமிடையே கிழிக்க முடியாத வலுவான திரையைப் போன்றிருந்து கொண்டு, பெயர் உரு வங்களோடு உன்னைக் கட்டுப்படுத்துவதோடும் மனத்தோடும் அதன் வெவ்வேறு பாவனைகளோடும் ஐக்கியப்படுத்துகிறது. இந்த மர்மமான திரை தான் உன்னுடைய உயர்ந்த நிலையைப்பற்றி உனக் குள்ள அறியாமைக்குக் காரணம். உனக்குள்ளே மிக ஆழத்தில் எப்பொழுதும் இருந்து கொண்டே இருக் கும் தடையாகிய இது ஆவரணம் எனப்படும். உனக்குள்ளே ஆழத்தில் இருக்கும் உணர்வுகளை மூடி யிருக்கும் திரை இதுவே.

மலம், விட்சேபம், ஆவரணம் ஆகிய இந்த மூன்று தடைகளையும் கட்டாயம் வெல்லவேண்டும். மனித இயல்பின் தாழ்ந்த நிலையிலுள்ள குறைகளும் குற்றங்களும் சேர்ந்ததே மலம் எனப்படுகிறது. மனம் எப்பொழுதும் அமைதியற்றும், கிளர்ச்சி யோடும் ஏதாவது ஒரு செயலில் ஈடுபட்டும் இருக் கும் நிலை விட்சேபம் எனப்படும். இது மனம் ஒரு முகப்பட்டு இருப்பதினின்றும் தன்னையே உள் நோக்கி ஆராய்ச்சி செய்வதினின்றும் தடை செய் கிறது. எதைப்பற்றிய உணர்வுமில்லாமல், அடிப் படை அறியாமை, ஆன்மீக அறியாமை என்னும் திரையால் நீ மறைக்கப்பட்டிருந்த நிலையே ஆவர ணம் எனப்படுகிறது. உடலோடும் மனதோடும்

உன்னை ஒன்றுபடுத்திக் கொண்டிருக்கும் உணர்விஞல் உண்டாகக் கூடியதுதான் இது. உடல், மனம் ஆகியவற்ருேடு உன்னை ஒன்று படுத்திக் கொள்ளுதல் என்ற உணர்வின் வடிவத்தில் இந்த அறியாமையாகிய திரை இருக்கின்றது. இந்த மூன்று தடைகளையும் அவற்றின் வெளிப்படையான உருவத்திலும் நுண்ணிய உருவத்திலும் கட்டாயம் வென்றுவிட வேண்டும்.

உடலோடு ஒன்றுபடுத்திக்கொள்வதுதான் வெளிப்படை நிலை. அதற்குள்ளே தமஸ நிலையும், அதற்குள்ளே ராஜஸ நிலையும் எல்லாவற்றுக்குள்ளும் உள்ளே சத்துவம் என்னும் திரையும் உள்ளன. இதை ஏன் சத்துவம் என்று சொல்ல வேண்டும்? ஏனெனில் அது விழிப்புணர்ச்சி; அங்கு ஞானம் அல்லது அறிவு இருக்கின்றது. பூரண ஞானமோ அல்லது உறக்கத்திலிருக்கும் போது இருப்பதைப் போல ஞானமேஇல்லாத நிலையோ இங்கில்லை. விழிப்புணர்ச்சி இருக்கின்றது. ஆஞல் அது "நான் இன்ஞன்; என்னை இப்பொழுது இழிவு படுத்தி இருக்கிருர்கள்" என்ற உணர்வுதான் அது. உனக்குச் சிறிதளவு தெரியும். ஆஞல் முற்றிலும் தவருன ஒன்றையே உணர்ந்திருக்கிருய். ஞானம் உள்ளது; ஆஞல் அது அஞ்ஞானம் எனப்படும். ஏனென்ருல் அது முற்றிலும் தலை கீழான ஞானம். எது இல்லையோ அதுவாகவே உன்னைக்கருதிக் கொள்கிருய். அறியாமை நிறைந்த விழிப்புணர்ச்சியையும் ஞானத்தையும் உடையவஞக இருக்கிருய். விழிப்புணர்ச்சியும், ஞானமும் உள்ள நிலையாதலால் அது சத்துவத்தின் விளைவாகும். தெளிவு அல்லது விழிப்புணர்ச்சி அனைத்தும் சத்துவமாகும். இதில் அறியாமை இருப்பதால், அஞ்ஞானம் எனப்படும். அதற்குப்பதில் உண்மைநிலை என்னும் ஞானத்தை ஏற்படுத்திக்கொள்ள வேண்டும்.

இந்த தமஸ, ராஜஸ, சத்துவ குணங்கள், தூய்மையற்ற குணங்கள். அமைதியற்ற இயல்புகள் உன் உண்மையான இயல்பைக் காணுத அறியாமை அல்லது மறதி என்னும் திரை ஆகிய தடைகளை மெதுவாகவும், படிப்படியாகவும், முறையாகவும் வெல்ல வேண்டும். அப்பொழுது திடீரென்று இம் மூன்று தடைகளுக்கும் மேலே ஆன்மீக ஞானம் என்னும் பேரொளி உதயமாகும். உன் உண்மை யான இயல்பை நேருக்குநேர் கண்டு மிகவுயர்ந்த அனுபவத்தைப் பெறுவாய். இந்த அடிப்படை யான தூய்மையற்ற பண்புகளை அவைகளுக் கெதிராகவுள்ள பண்புகளின் உதவியால் வென்று அவைகளை நீக்கிவிடலாம். ஓரிடத்திலுள்ள இருளைப்போக்க வேண்டுமானுல் என்ன செய்ய வேண்டும்? அங்குள்ள இருளைத் துடைப்பத்தால் பெருக்கியோ, துணியால் துடைத்தோ நீக்கி விடுவதில்லை. இருள் நீங்கவேண்டுமானுல் அதற் கெதிரான பண்பான ஒளியை அங்கு கொண்டுவர வேண்டும். அதற்கெதிரான ஆக்கபூர்வமான பண்பைக் கொண்டுவந்தால், அக்கணமே எதிர் மறையான தன்மை மறைந்து விடுகிறது. ஏனென்றுல் அதற்கு அடிப்படையே கிடையாது. எதிர்மறையான இயல்பு என்பது தானுக இயங்கும் தனித்தன்மையுள்ளது அன்று. இதை நன்கு கவனிக்க வேண்டும். எதிர்மறை இயல்புகள் தாமாக தனித்தன்மையோடு இயங்குவதில்லை. அவைகளுக்கு உண்மையில் ஆற்றலே கிடையாது. உடன்பாடான பண்புகள் இல்லாத நிலையையே அவைகள் குறிக்கின்றன. ஒருவன் பெரும் பொய்யன் என்றுல் அவனிடம் உண்மையே இல்லை என்றுதான் பொருள். பொய் என்று ஒன்றில்லை. அவனிடத்தில் உண்மை இல்லையாகையால் அவனைப் பொய்யன் என்கிறும். ''இனிமேல் நான் உண்மையோடு இருக்கிறேன்,'' என்று சொன்னுல்

அக்கண முதல் அவன் பொய்யன் என்பதில் அர்த்த மில்லை.

வெறுப்பு என்பது உண்மையில் ஒரு பண்பல்ல. நம்மீது எதிர்ப்பாயத் துடித்துக்கொண்டு நிற்கும் பயங்கரமான கருநிறம் கொண்ட வெறுப்பு என்று ஒன்றுமில்லை. அங்கு அன்பும் கருணையும் இல்லை என்பதுதான் பொருள். அன்பில்லாத நிலையைத் தான் அது குறிக்கிறது. ஒருவனிடத்தில் அன்பும் பரிவுமிருந்தால் அங்கு வெறுப்பு என்பது இல்லை. அன்பு தோன்றியவுடன் வெறுப்பு மறைந்து விடுகிறது. ஏனென்றால் உடன்பாடான இயல்பு உண்மையானது; மற்றது இல்லை. உடன்பாடான பண்பை வளர்த்தால், எதிர்மறை இயல்பு மறைந்து விடுகிறது.

எனவே 'ஆன்மீக வளர்ச்சியும், தெய்வீக அனுபவமும் பெறத் தேவையான ஆன்மீகப் பண்பாட்டை ஏற்படுத்திக்கொள்ள நற்பண்புகளைப் பயில்வதுதான் அடிப்படையான செயல் என்பதை மறக்கக் கூடாது. ஒரு கட்டிடத்திற்கு அடிக்கல் நாட்டுவதைப்போன்ற செயல் இது. ஒரு தரிசு நிலத்தைச் சோலையாக மாற்ற விரும்பினால், உடனே விதை விதைக்கத் தொடங்குவதில்லை. இயேசுகிறிஸ்து இதைப்பற்றிச் சொன்னது உங்களுக்கு நினைவிருக்கும். முட்செடிகளுக்கும் புதர்களுக்கும் நடுவில் விதைக்கத் தொடங்கினால், விதைகள் முளைக்கத் தொடங்கியவுடன், அவைகள் நசுக்கப்பட்டு மடிந்துபோகும். ஏனெனில் அவை கள் முளைக்க வேண்டிய நிலமானது பண்படுத்தப் படவில்லை. முதன் முதலாக நிலத்தைப் பண்படுத்த வேண்டும். நீ முதலில் செய்யவேண்டிய காரியம் அங்குள்ள களைகளையும், கற்களையும், புல் பூண்டு களையும் மற்றும் நிலத்திலுள்ள தேவையற்ற

பொருள்களேயும் முற்றிலும் அகற்றி நிலத்தைத் தூய்மைப்படுத்த வேண்டும். எனவே வேண்டாத பொருள்களே அகற்றுவதும், தேவையான சூழ் நிலேக்கு எதிராகவுள்ளவைகளே நீக்குவதும்தான் முதல் கட்டத்தின் முக்கியமான பணியாகும். ஒன்றுக்கும் உதவாததும், தெய்வீகமற்றதும், ஆன்மீகமற்றதும், விலங்கியல்புடையதும், பேராசை, வெறுப்பு, கோபம், பொருமை, தன்னலம், கர்வம், அகங்காரம், பற்று ஆகிய இயல்புகள் அனேவற்றையும் நீக்கிவிடவேண்டும். இவைகளேயெல்லாம் நீக்கிய பிறகு உன் உள்ள மாகிய சோலேயில் நற்பண்புகளாகிய மலர்களேப் பயிர் செய்ய வேண்டும். அப்பொழுதுதான் நீ தெய்வீகத் தன்மைபெற்று உயர முடியும். ''தெய்வீகத் தன்மைக்கு அடுத்தது தூய்மை'' என்று கூறும்போது அதற்குப் பலபொருள் கொள்ளலாம். தெய்வீகப் பண்புகளே வளர்த்துக் கொள்வதில் மிக்க ஊக்கமுள்ளவர்களாக இருக்க வேண்டும்.

பகவத் கீதையின் பதிஞருவது அத்தியாயத்தில் இந்த உண்மைகள் வியக்கத்தக்க முறையில் மனதைக் கவரும் வண்ணம் எடுத்துக் கூறப்பட்டுள் ளதைக் காணலாம். ''இந்த உடலும் நானல்ல; இந்த மனமும் நானல்ல. நான் அழியாத ஆன்மா'' என்ற தெளிவைப் பெற வேண்டுமாஞல் நற்பண்பு களேப் பயிலவேண்டும். வெளிப்படையான மனித இயல்பிலுள்ள அழுக்குகள் அல்லது தூய்மையற்ற தன்மைகளே அகற்றித் தூய்மைபெற வேண்டும். எனவே அவைகள், எல்லாம் நம்மிடம் உள்ளவை கள்தாம். நற்பண்புகள் நம்மிடம் இல்லாததால் உண்மையில் தீய பண்புகள் நம்மிடம் இல்லாவிட் டாலும், இருப்பது போலக் காணப்படுகின்றன. உன் உள்ளமாகிய சோலேயில் நற்பண்புகளாகிய

மலர்களைப் பயிர் செய். நற்பண்புகளைப் பயிர் செய்வதால் நிலையற்ற, தடுமாறும், அமைதியற்ற மனநிலையை மாற்றி விடலாம். பிரார்த்தனை போன்ற உள்ளப் பயிற்சிகளின் மூலம் அறியாமையாகிய திரை கிழிக்கப்பட்டு அகற்றப்படுகிறது. ஆழ்ந்த தியானம், தத்துவ ரீதியான விசாரணை பகுத்தறியும் உணர்வு, தன்னுராய்ச்சி, இடைவிடாத தத்துவார்த்தமான சிந்தனை ஆகியவற்றின் மூலம் உண்மை நிலையாகிய உணர்வைப் பெறுகிருய். அப்பொழுது உன் அனுபவம் எப்படி இருக்கிறது? நீ உணர்வது என்ன? என்ன சொல்லப்போகிருய்? '' நான் சச்சிதானந்தம் '' என்ற ஆன்மீக அல்லது தெய்வீகத் தெளிவாகிய மகத்தான அனுபவத்தை எவ்வாறு உன்னுல் விவரிக்க முடியும் ?

---

## 7. யோகம்

ஒரு வரம்புக்குட்பட்ட ஆன்மாவானது எல்லையற்ற பரம் பொருளோடு ஒன்றுபடுவதற்குரிய நெறிதான் யோகம் எனப்படுவது. இவ்வுலகத்தோடு கட்டுப்பட்டுள்ள ஜீவனின் உணர்வு மேலான பரமான்மாவோடு இரண்டறக் கலந்து விடுவதுதான் யோகம். மழைநீர் ஆற்று வெள்ளத்தோடு ஓடி, தான் முதலில் தோன்றிய கடலிலேயே கலந்து விடுவதுபோல, பரமான்மாவிலிருந்து தோன்றிய ஜீவன், தோன்றிய இடத்தையே மீண்டும் அடைய முயற்சிக்கின்றது. தனியொரு ஆன்மாவானது பரமான்மாவோடு கலப்பதுதான் யோகம். இது நடந்து முடிந்தவுடன் உள்ளத்திலுள்ள பந்தங்கள் அறுந்து விடுகின்றன. அதாவது துயரங்கள் அனைத்தும் நீங்கி எல்லையற்ற பேரானந்தமும் மேலான அமைதியும் கிடைக்கும். அதன்பின் உனக்குத்

தேவைகள் எதுவுமே இல்லை. ஆசைகளும் இல்லை. நீ முற்றிலும் அமைதியும் நிறைவும் பெற்ற நிலையில் இருப்பதாக உணர்வாய். யோக நெறியில் எடுத்துக்கொண்ட பெரு முயற்சியின் முடிவு அதுவே.

உலகிலுள்ள பொருள்கள் அனைத்தும் நிலையற்றவை. எனவே அவைகளால் நிரந்தரமான மகிழ்ச்சியைக் கொடுக்க முடியாது. மகிழ்ச்சியை அனுபவித்தது முடிந்தவுடன் ஏமாற்றம் ஏற்படுகின்றது. அதனால்தான் ''சர்வம் துக்கம் விவேகின:'' என்று சொல்கிறார்கள். ஞானமுள்ள ஒருவன் இவ்வுலகத்தைத் துன்பம் நிறைந்ததாகவே காண்கிறான். எனவே இவ்வாழ்க்கையில் உண்மையான மகிழ்ச்சியை எவராலும் காண முடியாது. இருப்பினும் மனிதன் நீடித்த இன்பத்தை அடைவதற்கு முயற்சி செய்கிறான். இதன் காரணமாகத்தான் ஞானிகள் உயர்ந்த நிலையிலிருந்துகொண்டு, ''மனிதர்களே! எழுந்திருங்கள்; நாங்கள் சொல்வதைக் கேளுங்கள். உங்களுக்கு அழியாத இன்பத்தை வழங்கக் கூடிய நிலையான பொருள் ஒன்றை நாங்கள் கண்டு பிடித்திருக்கிறோம். நாங்கள் அடைந்த நிலையை நீங்கள் அடைவீர்களாக!'' என்று கூவிக் கொண்டிருக்கிறார்கள்.

நிலைத்த பேரின்பம், யோகத்தின் மேலான பலன் என்பது எவராலும் விவரிக்க வொண்ணாத ஒன்று. அது அளவுகடந்த பேரானந்த வெள்ளம் என்று சொல்லப்படுகிறது; வெளிப்படையாக எடுத்துக் கூற முடியாதது. இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்யாஹாரம், தாரணை, தியானம், சமாதி ஆகிய எண்வகை நிலைகளைப் பயின்று மேலான உணர்வைப் பெற்றுள்ள இராஜ யோகி ஒருவர் அடைந்த முடிவான பயன்தான்

அது. அது உன் தனிப்பட்ட உணர்வு அல்லது இயல்பை உடைத்தெறியும் எல்லையற்றபேரானந்தமாகும். இந்தப் பேரானந்தத்தைப் பெறும் ஒருவரால் அதைப்பற்றி ஒன்றும் விவரிக்க முடியாது. பேச முடியாத ஊமையாகி விடுகிறுன். ஊமையிடம் மிகவும் சுவையான தின்பண்டத்தைக் கொடுத்தால் அதைப்பற்றி அவனுல் என்ன சொல்லமுடியும்? இதிலிருந்து யோகி ஒருவன் பெறும் பேரானந்தத்தின் சிறப்பைப்பற்றி நீ ஒருவாறு உணர்ந்து கொள்ளலாம்.

மனிதன் தனக்கேற்படும் துயரங்கள், துன்பங்கள் ஆகிய அனைத்தையும் நீக்கிக் கொள்ளவும், அழியக்கூடிய இந்த வாழ்க்கையால் ஏற்பட்ட பந்தத்திலிருந்து விடுதலை பெறவும், அச்சங்கள், மரண பயம் இவற்றிற்கெதிராக முடிவான வெற்றியைப் பெறவும் ஏற்பட்ட தேவைதான் யோகத்தின் தோற்றத்துக்கு மூலகாரணமாக அமைகிறது. இந்தப் பெரும் பிரச்சினைக்கு யோகம் தான் நடைமுறைக் கேற்ற தீர்வாக உதவுகிறது. பேரின்பம், நிறைந்த அமைதி, விடுதலை ஆகியவற்றின் இயல்புகளையே மனிதன் பெற்றிருக்கிறுன் என்று எளிய முறையில் யோகம் கூறுகிறது. தனக்கு ஆதாரமாக அமைந்துள்ள எல்லையற்ற பரம்பொருளோடு தனக்குள்ள ஒருமைப்பாட்டுணர்வை மறந்ததன் காரணமாகத் தான் இந்த உலக வாழ்வாகிய சிக்கலில் சிக்குண்டுத் தவிக்கிறுன். உண்மையான தெளிவை மீண்டும் பெறுவதும் இறைவனுடன் நிலையான ஒருமைப் பாட்டுணர்வைப் பெறுவதும்தான் உண்மையில் யோகம் பயில்வது எனப்படுகிறது. உலக வாழ்க்கையிலுள்ள குற்றங்களையும் குறைகளையும் வென்று பரம்பொருளோடு ஒன்றுபடுவதற்கேற்ற நெறியைக் கொண்டதுதான் அதன் அமைப்பாகும். இழிவான இயல்புகளிலுள்ள குறைகளைக் களைந்து

மனத்தையும் புலன்களையும் முழுவதும் அடக்கி யாள்வது எப்படி என்பதை யோகம் நமக்குக் காட்டுகிறது.

யோகத்தின் நெறிகள் அனைவற்றுக்கும் மனத்திலும் ஒழுக்கத்திலும் தூய்மை இருக்கவேண்டும். யோக வாழ்க்கையின் அடிப்படையே தூய்மை தான். கெட்டவன் ஒருவனால் யோகம் பயில முடியாது. தூய்மையும் அக்கறையும் உண்மையும் அற்றவனாய், மற்றவர்களை ஏமாற்றிக் கொண்டும், அவர்களுக்குத் தீங்கு செய்து கொண்டும் இருப்பவனால் யோகம் பயில முடியாது. உள்ளத்தில் தூய்மையற்றிருந்தால், ஆன்மீகத் தெளிவைப் பெறமுடியாது. நல்லொழுக்கத்திற்கான பண்புகள் ஆழமாக உள்ளத்தில் பதியாவிட்டால், சமயப் பயிற்சியோ, உண்மையான ஆன்மீகப் பயிற்சியோ (உள்ளொளியோ) இல்லை. நல்லெண்ணம், சத்தியம், தூய்மை, தன்னலங் கருதாமை ஆகிய பண்புகள் ஒருவரிடம் ஆழமாக வேரூன்றி இருக்கவேண்டும். உயர்ந்த இலட்சியத்தோடு கூடிய நல்லொழுக்கம் ஒருவரிடத்தில் சிறந்த முறையில் அமைந்திருந்தாலே யோகத்தில் பாதி அளவு வரப்பெற்றதெனலாம். இந்த அடிப்படை நன்றாக அமைந்தால் தீப்பெட்டியின் பக்கத்தில் உலர்ந்த தீக்குச்சியை தேய்க்கும்போது உடனே உண்டாகும் தீயைப்போல தாமதமின்றி உள்ளொளி பெருகும். இந்த அடிப்படை இல்லாவிட்டால், ஈரமான தீக்குச்சியை சோப்புக் கட்டியின்மேல் தேய்ப்பதைப்போன்று, ஒரு பயனும் உண்டாகாது.

யோக நெறியின் எல்லா நிலைகளிலும் இறையருள் தான் மிகச் சிறந்த அம்சமாகும். நாம் அதை எப்பெயரிட்டு வேண்டுமானாலும் அழைக்க

லாம். அது மிக மேலான ஆற்றலின் அருள்; உலகிலுள்ள உயிர்கள் வாழ்வதற்கு ஆதாரமான ஒன்று. மனிதன் தன் உண்மையான நிலையைப் பற்றியும் அழிவற்ற தெய்வ நிலையைப் பற்றியும் யோகத்தினிடமிருந்து தான் உணர்ந்து தெளிகிறான். மனிதனை இறைவனை நோக்கிச் செலுத்தி, இறைவனோடு ஒன்றுபடுத்தும் பயிற்சிகள் அனைத்தும் பயனுள்ளவை ஆகும். இதுதான் யோகத்தின் நோக்கம்.

---

## 8. ஸ்ரீமத் பகவத் கீதை

பகவத் கீதை தேவலோகத்திலுள்ள கற்பகத் தருவைப் போன்றது. ஒவ்வொரு மனிதனுடைய குறிப்பிட்ட தேவைக்கேற்றபடி அவன் வேண்டும் பொருளைக் கொடுக்க வல்லது. பூவுலகத்தில் தர்மம் மறைந்து, அதர்மம் மேலோங்கத் தொடங்கிய காலத்தில் மனித குலத்தில் இழிநிலை தோன்றியதைக் குறிக்கும் ஒரு குறிப்பிடத்தக்க நூலாக சரித்திர ஆசிரியர்கள் அதைக் கருதுவார்கள். மனிதனுக்குள்ளே இருக்கும் ஆற்றல்களுக்கிடையே நடக்கும் போராட்டத்தையும் அதன் விளைவாக முடிவில் ஏற்படும் மிக உயர்ந்த ஒரு தீர்மானத்தையும் அதில் உருவகப்படுத்தி இருப்பதாக தத்துவக் கலைஞர்கள் தங்கள் கற்பனையில் காண்கிறார்கள். தத்துவக் கலையில் பழமையான கொள்கையில் நம்பிக்கையுள்ளவர்கள் பிரஸ்தானத்ரயங்களில் ஒன்றாக பகவத் கீதையைக் கருதுகிறார்கள். ஆனால் இந்து மதப் பண்பாட்டில் உறுதியான நம்பிக்கையுள்ளவர்களுக்கு பகவத் கீதை என்பது வேதாந்தங்களிலுள்ள உயர்ந்த கொள்கைகள், உபநிடதங்களிலுள்ள வாதப்பிரதிவாதங்கள், அவற்றின் முடிவுகள் ஆகியவற்றின் சாரமாக விளங்குகிறது.

முன்னொரு காலத்தில் ஒரு சிறுவன் இருந்தான். அவன் பசுக்களை மேய்த்துக் கொண்டும் அவற்றோடு விளையாடிக் கொண்டும் இருந்தான். அவனுடைய சொல் இப்பொழுது அழியாத அமர நிலை பெற்று விட்டது. அவனுடைய பேச்சு உலகிலுள்ள மிக உயர்ந்த சிறு நூல்களில் ஒன்றாக விளங்குகிறது. அதுதான் பகவத்கீதை. அது நடை முறைக்கு ஏற்ற மேலான வழியாகிய உபநிடத வழியைக் கூறுகிறது. உபநிடதங்களிலுள்ள பேரின்பத்தை எவ்வாறு பிரித்தறிந்து சுவைத்து இன்பம்பெறலாம் என்று நமக்குக் கூறுகிறது.

இந்த உலகம் முழுவதும் ஒரு கனவைப் போன்றது என்ற அபரோக்ஷ அனுபூதியை (நேரடி அனுபவத்தை) உபநிடதங்கள் வலியுறுத்திக் கூறுகின்றன. ஆனால் நம்முடைய உண்மையான அனுபவம் என்ன? நீ கேட்கும் ஒரு சுடுசொல் அல்லது உன்னுடைய உணவிலுள்ள சுவை மாற்றம் நீ கனவு அல்லது மாயை என்று சொல்கின்ற இந்த உலகத்தை உண்மையானதாக மாற்றி விடுகிறது. இந்த வலையில்தான் நீ வீழ்ந்து விடுகிறாய்.

ஒரு செல்வந்தர் பெரிய விருந்து ஒன்றுக்கு ஏற்பாடு செய்து ஊரிலுள்ள அனைவருக்கும் அழைப்பை அனுப்புகிறார். ஆனால் அவருடைய வாயிலுக்கருகில் பயங்கரமான நாய் ஒன்றைக்கட்டி இருக்கிறார். எல்லோரும் உள்ளே எட்டிப் பார்க்கலாமே தவிர, யாரும் உள்ளே நுழைய முடியாது. ஆன்மீகத் தெளிவாகிய பேரின்பத்தை அனுபவிப்பதிலும் இந்த நிலை இருக்கின்றது. சமயத்துறையில் ஆன்மீக இன்பத்தைச் சுவைக்க விடாமல் உன்னைத் தடுக்கும் பொருள் ஒன்று இருக்கின்றது. சிலர் அதை சாத்தான் என்றும், மற்றவர்கள் மாறன் அல்லது மாயை என்றும் சொல்லுவார்கள். ஒவ்

வொரு மதத்திலும் அது இருக்கின்றது. உபநிடதத்திலுள்ள பேரின்பம் உன்னைச் சுவைப்பதற்காக அழைக்கின்றது. ஆனுல் அதற்கிடையே உன்ஞல் எளிதில் கடக்க முடியாத இந்தத்தடை இருக்கின்றது. அதை ''மம மாயா துராத்யாயா'' என்று பகவான் கீதையில் கூறுகிருர். அதனுல்தான் உபநிடதங்கள், மறைநூல்கள், முனிவர்கள், அவதாரங்கள், சமயங்கள் ஆகிய அனைத்தும் இருந்தபோதிலும், இந்த உலகம் உண்மையாகவே காணப்படுவதோடு, உலகியல் பொருள்களிடம் பற்றும் நிலைத்திருக்கிறது பிரேயசிலிருந்து விடுபட்டு சிரேயசாகிய நெறியைக் கடைப்பிடிப்பது மனிதனுக்கு மிகவும் கடினமாக இருக்கிறது, இங்கேதான் நமக்கு உண்மையான சிக்கல் இருக்கிறது. உபநிடதங்களில் விவரித்துள்ளபடி ஆன்மீக ஞானத்தின் மேன்மையையும், இன்பத்தையும், அளவிலா ஆனந்தத்தையும், அனுபவிக்க வேண்டுமானுல், அதற்குரிய வழி என்ன? ஒவ்வொரு மனிதனுக்குள்ளேயும் மாயையாகிய தடை இருக்கின்றது. அது உண்மையில் மனிதனின் மனம் தவிர வேறில்லை என்பதை ஆராய்ச்சி செய்து முடிவாகக் காணலாம். சாதகன் ஒருவன் தன் மனதை வெல்வதுதான் அவனுக்குள்ள முக்கியமான சிக்கலாகும். அதை வென்றுவிட்டால் உபநிடதங்களில் விவரிக்கப்பட்டுள்ள அனுபவங்களை அடைந்து மேன்மை அடையலாம். பரபிரம்ம (பூமா) நிலையைப்பெற்று பேரானந்தமடையலாம். அதைப் பெற்றபின் அவன் பெற வேண்டியது எதுவுமே இல்லை. எனவே இந்த மாயை அல்லது மனதை வெல்வதற்குரிய வழி யாது?

மாயை என்பது மனிதனுக்குள்ளே அவனுடைய மனதின் உருவத்தில் இருக்கிறது. மாயையின் இந்த தனிப்பட்ட இயல்பானது, அவனை முற்றிலும்

மயக்கத்தில் ஆழ்த்திவிட்டு, அவனுடைய அகந்தையை மேலோங்கச் செய்து வெளியுலக வாழ்க்கையில் அவனுக்குப் பயங்கர நாசத்தை விளைவிக்கிறது. அவனுடைய ஆன்மாவை உடலோடு ஐக்கியப்படுத்திக் கொள்வதாகிய 'அத்யாசம்' என்னும் உருவத்தில் அந்த அகந்தை இருக்கலாம். வேதாந்திகள் மனிதனிடத்திலுள்ள இந்த இயல்பை அத்யாசம் என்பார்கள். இந்தத் தவறான எண்ணத்திலிருந்து விடுபடவேண்டும். நீ உண்மையாக எதுவோ அதுவாகத்தானிருக்கிறாய். அப்பொழுது தான் உன் சிறப்பான இயல்பால் பெருமை பெறுவாய். ராஜயோகிகள் இந்த விந்தையான ஆற்றலின் இயல்பை ''விருத்தி'' (எண்ண அலை) என்பார்கள். விட்சேபம் அல்லது மனதின் வீழ்ச்சி எப்போதும் இருக்கின்றது. ஆகையால் விருத்திகளை முற்றிலும் அழித்துவிட்டு மனதை முற்றிலும் அடக்கவேண்டும். விருத்தி என்பது மனித வாழ்க்கையின் சாபக்கேடாகும். இதே மனமானது அகந்தையை அடிப்படையாகக்கொண்டு, அவனுடைய உணர்ச்சிகளின் வாயிலாக பல்வேறு தொடர்புகள் அல்லது பற்றுகளை ஏற்படுத்திக்கொள்கின்றது. மனிதனின் உணர்ச்சிகளின் வாயிலாக பற்றை உண்டாக்கிக்கொள்ளும் தன்மை ''மமதை'' (எனது என்னும் உணர்வு) எனப்படும். இதை பக்தியோகத்தின் மூலம் நன்றாகத் தூய்மைப்படுத்தி, மேன்மை அடையச் செய்யலாம். இந்த மனம் வேறொரு வழியிலும் செயல்படுகிறது. கர்வம், தன்னலம், பொருள் சேகரித்தல் ஆகிய உருவங்களில் வெளிப்பட்டு இறக்கும் வரையில் அவ்வகையிலேயே செயலாற்றும். இதனால் தன்னலம் கருதியும், தனக்குப் பொருள் சேர்க்கும் முறையிலும் தீவிரமாகவும் முழுமுயற்சியோடும் ஈடுபட்டு, இவ்வகையில் தான் பெறும்வெற்றிகளைக் கண்டு வீண் கர்வம் அடைகிறது. இதை தன்னலத்தையும்

கர்வத்தையும் வெல்வதற்குரிய கர்மயோகம் என்னும் யோகநெறியின் உதவியால் பயனுள்ள வகையில் எதிர்த்து அடக்கிவிடலாம். ராகத் துவேஷங்களை விட்டுவிட்டு, தனக்கென வாழாப் பிறர்குரியாளனாக வாழ்ந்து, வணக்கமுள்ள பாவம் அல்லது மனநிலையோடு கர்மயோகத்தில் செயல் படுவதுதான் கர்மயோகம்.

உபநிடத உண்மை உனக்குள்ளே சிறப்பான நேரடி அனுபவமாக இருக்கச் செய்ய வேண்டு மானால் மேலே சொன்ன பொதுப்படையான இயல்புகளில் இறைவனுடைய மாயையை வெல்ல வேண்டியது மிகவும் தேவையானதும், இன்றியமை யாத ஒன்றுமாகும். இது ஒரு எதிர்மறைச் செயல். அது ஆத்மஞானத்தைக் கொடுக்காது. ஆனால் அது மிகவும். தேவையானது. பல்வேறு மனிதர்களுக் கேற்ற வகையில் மிகவும் அழகான முறையில் கீதை காட்டும் சாதனா மார்க்கம் இதுதான்.

சாதனை செய்யவேண்டும் என்பது நமக்குத் தெரியும். அதை எவ்வாறு செய்வது? நம்மிடம் பல்வேறு தவறான சம்ஸ்காரங்கள் இருக்கின்றன. ஒரு மனிதன் உண்மையில் சாதனை செய்வது எப்படி? இதற்கு விடையாக கீதையில் சில சாத னைகள் கூறப்பட்டுள்ளன. சொற்பொழிவுகளைக் கேட்பதாலும், நூல்களைப்படிப்பதாலும் ஆன் மாவை அணுகமுடியாது. உண்மை என்ன என் பதைப்பற்றி அறிய இவைகள் தேவையே. எல்லா வற்றிற்கும் மேலான இறைவனே நம் அனைவருக் கும் அர்ச்சுனன் மூலமாகச் சொல்லி அருளிய உரை யாடல் அல்லது பேச்சு கீதையிலேயே இருக்கின்றது. எனவே இங்கு தேவையானது நாம் பேச்சை அடக்கி இறைவன் குரலுக்கு செவிசாய்க்க வேண்டும் என் பதே. நாம் ச்ரோதர்கள் (கேட்பவர்கள்); இறை

வன் வாக்தா (ஆசான்). நம்முடைய முடிவுள்ளதும் தனிப்பட்டதுமான வாழ்க்கையிலுள்ள ஓசைகளை எல்லாம் அடக்கிக்கொண்டு, அந்த அமைதியான சூழ்நிலையில் இறைவனுடைய குரலாகிய கீதையின் அழைப்பைக் கவனமாகக் கேட்பதற்கு நன்முறையில் முயல வேண்டும். எனவே மௌனம் தான் கீதையை வழிபடுவதற்குரிய சிறந்தவழியாகும். பேசாமல் அக்கரையுடன் பயில்வதுதான் அர்ச்சுனன் இறுதியில் தன்னுடைய கேள்வி கேட்கும் மனநிலையை முடித்துக் கொண்டதும் அவ்வாறு தான்— ''நீ சொல்லும் வண்ணமே நான் செய்கிறேன்'' அவ்வாறே பேசாமல் அமைதியாக இருந்து கீதை வழியில் நடப்பதுதான் நம்முடைய கடமையுமாகும்.

மனம் எனப்படுவது நம்மிலிருந்து வேறுபட்டது என்று நமக்கே தெரியாது. மனதை வெல்வது நம்மை நாமே கொல்வது போன்றது. ஆனால் அது மிகவும் இன்றியமையாதது. மனத்தினின்றும் உன்னைப் பிரித்துக்கொள்வது உனக்கே மரணஅடி கொடுப்பதைப் போன்றதே. ஏனென்றால் இதுவரை அதை நீயாகவே கருதிக் கொண்டிருக்கிறாய், இப்பொழுது ''நான்'' என்பது புதிதாகத் தோன்ற வேண்டி இருக்கின்றது. ஒரு மனிதனுடைய விவேகத்தன்மையைப் பொறுத்த அளவில் மனத்தோடு ஒத்துழையாமை செயல்படத் தொடங்க வேண்டி இருக்கிறது. அப்பொழுது மனம் என்பது உன்னிலிருந்து வேறானது என்பதை அறிவாய். இந்த சாதனைக்கு மனவுறுதி தேவை. மனம் அகந்தையின் உதவியால்தான் அழிவு வேலையைச் செய்கிறது. எனவே நாம் மற்றொரு கெட்டிக்காரத்தனமான வேலையையும் செய்ய வேண்டி இருக்கின்றது. அகந்தையை அழிக்க வேண்டும். அகந்தையின் அழிவு சாதனையின் தொடக்கத்திலேயே ஆரம்ப

மாக வேண்டும். அது நிர்விகல்ப சமாதியில் முடி கிறது. கண்களை மூடிக் கொண்டு செயல்பட வேண்டும். அது வெளியில் இல்லை. நமக்குள் ளேயே இருக்கின்றது. நமக்கு அதைப்பற்றி ஒன் றும் தெரியாது. வழித்துணையும் வேண்டும். அதனிடத்தில் முழு நம்பிக்கையும் வைக்கவேண்டும். அதனிடத்திலேயே பரிபூரண சரணாகதியும் அடைய வேண்டும். எவ்வளவு பெரிய தேவை! இவை மூன்றும் மிகவும் இன்றியமையாத தேவைகளாகும்.

''தத்வித்தி ப்ரணி பாதேன, பரிப்ரச்னேன ஸேவயா:'' —அடிகளில் வீழ்ந்து வணங்கியும் கேள்வி கள் கேட்டும் ஸேவை செய்தும் அதைத் தெரிந்து கொள். தான் வேறொருவரைவிடத் தாழ்ந்தவ னென்றும், தன்னை விட எல்லாவகையிலும் மேலான ஒருவர் இருக்கின்றாரென்றும் கருதி, ஒரு வன் மற்றவருடைய அடிகளில் வீழ்ந்து வணங்க விரும்புவதில்லை. எனவே இது ஒருவனுடைய உணர் வில் ஒரு புரட்சியையே உண்டாக்கி விடுகிறது. பரிப்ரச்னேன— ''தனக்குத் தெரியாத விஷயங்கள் அநேகமிருக்கின்றன. தான் அவைகளைத் தெரிந்து கொள்ள வேண்டும்'', என்று எவரும் விரும்புவ தில்லை. ''நீ யார் எனக்குக் கற்றுக் கொடுப்ப தற்கு?'' என்று தான் கேட்கிறான். உன்னுடைய அகந்தையின் இந்த இயல்பை முற்றிலும் துறந்து விட்டு, உனக்கு உதவக் கூடிய துணைவனை அடக்கத் துடன் அணுகி, உண்மையை அறிய முயலவேண் டும். அதற்குப் பிறகு ஸேவை: நமக்கு எல்லோ ரும் ஸேவை செய்ய வேண்டும் என விரும்புகிறோம். ஆகையால் அகந்தையின் இந்த இயல்பை விரட்டி யடிப்பதற்குரிய வழி நாம் ஸேவை செய்வது தான். அகந்தையை விரட்டிவிடு. ஆசானுக்குத் தொண்டு செய். அவருக்கு ஒரு சாதாரண அடிமையைப் போலப் பணி செய். இவ்வழியில்தான் பின்னால்

வரக்கூடிய சாதனைகளுக்கெல்லாம் அடிப்படை அமைக்கப்படுகிறது. அவைகள் அகந்தையின் தீய இயல்புகள் அனைத்தையும் தாக்கி, அஸ்மிதை எனப்படும் இறுதியான தீய இயல்பையும் அடியோடு அழித்துவிடும். அஸ்மிதை என்பது இருமையுணர்வு. எனவே அது மேலே எழும்பி வராது. எனவே அகந்தையைத் தாக்கி, அடக்கி, திசை மாற்றி மேலான பண்பாக உருமாற்றம் செய். முடிவில் அழிவற்ற பரமாத்மாவின் மேன்மை ஒன்றே ஓங்கி நிற்கும். அதுவே ''தத்வமஸி.''

இந்த வழியில் நீ ஒரு முறையல்ல, பத்து முறை, நூறுமுறை அல்லது ஆயிரம் முறை கூடத் தோல்வி அடையலாம். சாதனை என்பது பெரிய தோல்விகளிலிருந்து சிறிய தோல்விகளுக்குச் செல்வது. வரவரக் குறைந்து கொண்டே வரும். உலகம் முழுவதையும் ஒரே ஆன்மாவாகக் காண விரும்பினால் நீ தியானத்தில் மூழ்கி விடுகிறாய். ஆனால் கண்களைத் திறந்து உலகியல் விவகாரத்தில் நுழையும் அக்கணமே, ஒரு மனிதனை நல்லவனாகவும் மற்றொருவனைக் கெட்டவனாகவும் பார்க்கிறாய். ஆன்மீக அனுபவத்தை நாடிச் சென்று அடைவதென்று தீர்மானிக்கும் ஒருவனுக்கு மனவுறுதி தேவை. அவன் எப்பொழுதும் மனத்தளர்ச்சி அடையமாட்டான். அவன் முன்னேற்ற மடைவதுடன் தான் எதை அடைய வேண்டுமென்று எண்ணுகிறானோ அதைத் தவறாமல் அடைவான்.

கீதையின் முதல் அத்தியாயம் உள்ள உறுதியுடனும் தளர்ச்சியடையாமல் இருக்கும் படியும் கூறுகிறது. வீரத்தையும் வலிமையும் வற்புறுத்திக் கூறுகின்றது. இரண்டாவது அத்தியாயத்தில் விந்தையான விவேகத்தையும் விசாரத்தையும் பற்றிக் கூறப்பட்டுள்ளது. நிலையானவற்றையும் நிலை

யற்றவைகளையும் பகுத்தறிய வேண்டும். ''அழி வற்ற ஆன்மா உடலோடு மடிவதில்லை'', என்பதை உனக்கு நினைவூட்டுகிறது. உடல், மனம், உயிர் ஆகியவை ஒரு பக்கமும், சிறப்பு மிக்க தூய் மையான ஆன்மா மறுபக்கமும் உள்ள உண்மை யைப்பற்றி இந்த அத்தியாயத்தில் விவரிக்கப் பட்டுள்ளது. பன்னிரெண்டாவது அத்தியா யத்தில் உணர்ச்சிகளை மாற்றும் வழி கூறப் பட்டுள்ளது. இந்த அத்தியாயத்திலுள்ள கடைசி எட்டு சுலோகங்களும் பக்தியோகத்தைப்பற்றி விளக்குகின்றன. பத்தாவது அத்தியாயத்தில் விஸ்வரூப தரிசனத்தைப்பற்றி அனுபவத்தையும் அதைப்பற்றிய இரகசியத்தையும், ஆன்மாவின் அனுபவத்தை நிலைபெறச் செய்வதைப்பற்றியும் கூறுகின்றது. பதிஞன்காவது அத்தியாயத்தில் உன்னை முற்றிலும் சாத்வீக நிலையில் எவ்வாறு வைத்திருக்க முடியும் என்று சொல்கிறது. ஏனெனில் சாத்வீக நிலைதான் தெய்வீக நிலையை அடைய உதவும் எளியபாதை. சத்துவ நிலையில் நிலைபெற்றபிறகுதான் உயர்ந்த நிலையை (மோட்சத்தை) அடையமுடியும். பதினாறுவது அத்தியாயத்தில் தெய்வீகமற்றவைகளை நீ எவ்வாறு கண்டறியலாம் என்று கூறுகின்றது. அவ்வாறு அறிவதால் அவற்றை உன்னிடமிருந்து நீக்கு வதற்கு முயலுவதோடு, தெய்வீகமான இயல்புகளை உணர்ந்து அவற்றை அடைவதற்குத் தீவிரமாக முழுமுயற்சியோடு பாடுபடலாம். பதினைந்தாவது அத்தியாயத்தில் உன் வாழ்க்கையை எவ்வாறு ஒரு (வேள்வியாக) யோகமாக அமைத்துக்கொண்டு, எல்லா உயிர்களிலும் பரவி நிற்கும் ஆன்மாவை உணரலாம் என்று விவரிக்கின்றது. அபரோக்ஷ அனுபூதியாகிய உபநிடத ஞானத்தை அறிந்து தெளிவதற்குரிய நடைமுறை சாதனையைப்பற்றிய எல்லா விவரங்களையும் கீதை நமக்கு விளக்கு

கின்றது. இவைகளை நாம் பின்பற்றுவதோடு கீதையின் நடைமுறை சாதனையை நம் மனமாகிய கோயிலில் வைத்துப் போற்றவேண்டும்.

எனவே சத்குருவாக விளங்கும் இறைவனையே எப்பொழுதும் சரணாகதியாக அடைந்து நம் வாழ்க்கையை நடத்தவேண்டும். அவ்வாறு வாழ்ந்து கொண்டு முழுவைராக்கியத்துடனும், பிரேயஸை ஒதுக்கித்தள்ளி சிரேயஸை தேர்ந்தெடுத்துக் கொண்டு சாதனையில் ஈடுபடுவோமானால், நம் சாதனை பயனுள்ளதாகும். இறுதிப்பயன் இறைவனுடைய கைகளில் இருக்கின்றது. நீங்கள் அனைவரும் கீதை காட்டும் பாதையில் வாழ்க்கையை நடத்தி, மேலான பேரின்பத்தைப் பெறுவீர்களாக.

---

## 8. தியானமும் அதன் பயனும்

ஆன்மீக வாழ்க்கைக்குத் தேவையான அடிப்படையை அமைத்துக் கொண்டு, புலன்கள் நாலா பக்கங்களிலும் ஈர்க்கும் கவர்ச்சியை வென்று அவற்றை அடக்கியாளும் ஆற்றலைப் பெற்றபின், பகுத்தறியும் ஆற்றலினாலும் உண்மையான ஆராய்ச்சியின் விளைவாகவும் நமக்கு முன்னே காணப்படும் தோற்றங்களின் பொய்மையை உணர்ந்து அவற்றை நாடிச் செல்வதிலிருந்து மனதைத் தடுத்து நிறுத்தி, உலகியலில் பெயர்கள் உருவங்கள் ஆகியவற்றின் மீது அதற்குள்ள கவர்ச்சியையும் பொருள்கள் அனுபவங்கள் ஆகியவற்றின் மீதுள்ள பற்றையும் முற்றிலும் போக்கி விடுவதில் வெற்றி பெற்ற பிறகு, வெளியுலகப் பொருள்களின் தோற்றத்தை நாடிச்செல்வதிலிருந்து மீட்டபிறகு, மனதில் அமைதி, சமநிலை, சமநோக்கு ஆகிய பண்புகளைத் தோற்றுவித்து நிலைபெறச் செய்த பிறகு,

ஏற்றுக்கொள்ள வேண்டிய நெறிதான் தியானம். நற்பண்புகளில் நன்ருக வேரூன்றி, புலன்களின் கட்டுப்பாடும் தன்னடக்கமும் நிலைபெற்று, ஆசைகளை அடக்கி வேட்கைகளை வென்று, மனதில் சமநிலையையும் சமநோக்கையும் பெற்றுள்ள அந்த நிலையில் தன் ஆற்றல் முழுவதையும் சேகரித்துக் கொண்டு வெளித்தோற்றங்களுக்கு மாறுபட்டதாகவுள்ள மேலான உண்மை அல்லது பரம்பொருளைப் பற்றிய தத்துவத்தை நோக்கிச் செல்லத் தொடங்குகிருய். உனக்குள்ளே இருக்கும் ஆற்றல் முழுவதையும் ஒருங்கிணைத்துக்கொண்டு அதை உன்ஞல் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள குறிப்பிட்ட திசையில் செலுத்துவதற்காக முயலுவதும் அவ்வாறு ஒருங்கிணைக்கப்பட்ட உன்னுடைய ஆற்றலை உன்னுடைய குறிப்பிட்ட திசையை நோக்கிச் செலுத்துவதை மாற்ருமல் இடைவிடாது நீடிக்கச்செய்வதும் தான் உன் தியானத்தின் நோக்கமாகும். இந்த ஆற்றல் உனக்குள்ளே ஒருங்கிணைக்கப்பட்டு, குறிப்பிட்ட திசையில் செலுத்தப்படுவது தடையில்லாமல் தொடர்ந்து நீடிப்பதில் வெற்றி ஏற்படுமாஞல், நீ தியான நிலையில் இருப்பாய்.

எனவே நீயாகத் தேர்ந்தெடுத்த நெறியில் உனக்குள்ளே இருக்கும் ஆற்றல் முழுவதையும் இடைவிடாது செலுத்தும் முறையே தியானம் எனப்படும். மற்றவைகள் எல்லாம் அவரவர்கள் கருத்துக் கேற்றபடி தியானம் என்று சொல்லப்படும். மற்றவைகள் எல்லாம் நீ தியானம் என்று நினைப்பவையே தவிர உண்மையில் தியானம் அல்ல. நற்பண்புகளில் வேரூன்றி இருப்பதுதான் தியானத்துக்கு இன்றியமையாத தேவையாகும். நற்பண்பு என்பவை தியானத்தில் ஈடுபடுவதற்குமுன் தேவையான இன்றியமையாத சில ஆன்மீக குணநலன்களைக் குறிக்கும். அவைகளில்லாவிடில் தியானத்

தில் ஈடுபட முடியாது. வேறு சில பண்புகள் தரைக்கு மேலுள்ள கட்டிடத்தை அமைக்க உதவும் கற்களைப் போன்றவை. அதன் உச்சியில் சிகரமாக அமைவது தான் தியானம். அச்சிகரத்தை அடித்தளம் இல்லாத வெறும் ஆகாயத்தில் அமைக்க முடியாது. அது உறுதியான தரையின் மேல் அகலமான அடித்தளத்தின் மேல் அமைக்கப்பட்டுள்ளது. அக் கட்டிடம் மேலே சிறிது சிறிதாக உயர்ந்து சென்று அதன் உச்சியில் தியானம் என்னும் ஒரே கல்லாக முடிகிறது. தியானம் நற்பண்புஎன்னும் அடித்தளத்தின்மேல் அமைக்கப்பட்டுள்ள நெறியாகும். நற்பண்புகள் என்று குறிக்கப்பட்டுள்ள ஆன்மீக இயல்புகள் ஏன் வலியுறுத்தப்பட்டுள்ளன என்பதை எளிதில் உணரலாம். தெய்வீக அனுபவங்களுக்கு விரோத மாகவுள்ள சக்திகளை உன்னுடைய இயல்புகளோடு சேராமல் தடுக்கும் பண்பட்ட இயல்புகள்தாம் அந்த நற்பண்புகள். அந்த தீய சக்திகள் தியான நிலைக்கும் ஆன்மீக அனுபவங்களுக்கும் நேர் விரோதமானவை. இந்த தீய சக்திகளும் இயல்பு களும் இருக்கும்வரை ஆன்மீக அனுபவங்களில் மேன்மைபெற முடியாது. ஒரே சமயத்தில் ஒன்றுக் கொன்று முரணான இருவேறு இயல்புகளை உடைய வர்களாக எவரும் இருக்கமுடியாது. இவைகளை அடக்க ஒரேஒரு வழிதான் இருக்கிறது. உனக் குள்ளே ஒரு ஆக்க பூர்வமான ஆற்றலை உற்பத்தி செய்து கொண்டால், அவை மறைந்துவிடும். அப்போது அவைகளை எதிர்த்து அடக்கிவிடலாம். உண்மையில் அவைகள் தனித்தன்மை உடையன அல்ல. நற்பண்புகள் இல்லாத நிலையையே அவை குறிக்கின்றன. எனவே அவைகளை வெல்வதற்கு உன்னிடம் சில நற்பண்புகள் என்னும் ஆக்க பூர்வமான சக்தியைத் தோற்றுவிக்க வேண்டும். ஆன்மீக மற்றவையும் நீ அடைய விரும்பும் ஆன்மீக

அனுபவத்துக்குத் தடையாகவும் நேர் விரோதமாக வும் உள்ள சக்திகளை உன்னுடைய இயல்பு களோடு சேரவிடாமல் தடுத்து நிறுத்தவல்ல ஆன்மீக குணங்களே அவை.

இந்த இன்றியமையாத ஆன்மீக மாறுதலையும் இயல்புகளை மாற்றியமைத்துக்கொள்ள வேண்டிய தேவையையும் அடிப்படையாகக் கொண்டு பார்க்கும்போது, தியானம் என்பது உனக்குள்ளே நடைபெறும் ஒரு செயல்முறை எனலாம். உன் மனம் முழுவதையும் எப்பொழுதும் வெளியுலகத் திலுள்ள பொருள்களோடு தொடர்புள்ளதாக வைத்திருப்பதே புலன்களின் முக்கியமான வேலை. புலன்களின் இயல்பும் அதுவே. எனவே புலன்களை அடக்கத் தெரியாவிட்டால், மனதை உள்நோக்கிச் செலுத்த முடியாது. மனதை உள்நோக்கிச் செலுத்துவது தியானத்துக்கு இன்றியமையாத தேவையாகும். ஆகையால் புலன்களை அடக்கு வது அடுத்துவரும் தேவையாகிறது. மனதை உள்நோக்கிச் செலுத்திய பிறகும், அது எப்பொழுதும் கொந்தளிப்புடன் இருக்குமானுல், இம்முறையை செயல்படுத்தத் தொடங்குவது கடினம். எனவே அங்கு அமைதியை ஏற்படுத்த வேண்டும். எனவே அடுத்துவரும் தேவை மனம், அதன் ஆசைகள், வேட்கைகள், பல்வேறு வகைப் பட்ட பேராசைகள், மனதை எப்பொழுதும் கொந்தளிப்புடன் வைத்திருக்கும் தொடர்புகள் வேட்கைகள் ஆகியவைகளை அடக்குதலாகும். அதை ஒரே நாளில் செய்துமுடிக்க முடியாது. மன தில் பூரண அமைதி ஏற்படுத்தும் இந்த முறைக்கு அநேக ஆண்டுகள் தேவைப்படும். அப்படியானுலும் அதனுல் பாதகமில்லை. பொறுமையை இழந்த நிலையில் ஆன்மீக வாழ்க்கையை மேற்கொள்ள முடியாது. அவசரப்பட்டாலும் முடியாது.

அளவுகடந்த ஆர்வமும், ஊக்கமும் இருக்க வேண்டும். அத்துடன் பொறுமையும் தேவை. எனவே இந்த அமைதியான நிலையை அடைவதற்கு உன் மனதிலுள்ள பல்வேறு வகைப்பட்ட ஆசைகள், பற்றுகள், அளவு கடந்த வேட்கைகள், திட்டங்கள் ஆகியவை அனைத்தையும் மனதிலிருந்து விலக்கி விடவேண்டும். இவைகளுக்குப் பதிலாக ஒன்றுபட்ட ஒரே ஒரு ஆர்வம் தான் இருக்க வேண்டும். மனமானது இந்த ஒரு பொருளைத்தவிர வேறெதுவும் விரும்பக் கூடாது. தேவைகளை அறவே நீக்குவது முடியாத காரியம். உணவு, நீர், உடை இதுபோன்ற மற்றவைகளுக்கான ஆசைகள் மிகவும் இன்றியமையாதவை. எனவே அவைகளுக்கான ஆசையை ஒழிக்க முடியாது. ஒரு தகப்பன் தன்னுடைய குழந்தையின் எதிர்காலத்திற்கான திட்டங்களை வைத்திருப்பான். ஆனால் அதே சமயத்தில் பல்வேறு வகைப்பட்ட ஆசைகளும் திட்டங்களும், இலட்சியங்களும் இருக்கும். ஒருங்கிணைந்த ஒரே திட்டம் அல்லது வேட்கைதான் இருக்க வேண்டும். அதாவது மனதிலுள்ள எல்லா எண்ணங்கள் அல்லது ஆசைகளில் உன்னுடைய முடிவான இலட்சியத்திற்குத்தான் அதிக முக்கியத்வம் கொடுக்கப்பட்டிருக்கும். தற்போதைய வாழ்க்கைக்குத் தொடர்புள்ள தவிர்க்க முடியாத ஆசைகளும் எண்ணங்களும் மனதில் மேலெழுந்தவாரியாக இருந்தாலும், அதன் முக்கியமான எண்ணங்கள் இணைந்து செயல்படும். அவ்வாறு ஒருங்கிணைந்துள்ள போது அதன் எண்ணங்கள் சிதறாது. வேட்கைகளோ, ஆசைகளோ அங்கில்லை. அப்போது மனமானது முற்றிலும் உள்ளே இழுக்கப்பட்டு ஒருங்கிணைந்து செயல்படுகிறது. அதை வடமொழியில் ''ஏகாக்ரதா'' என்று கூறுவார்கள்.

மனதில் ஒருமுகப்பட்ட நிலையை அடைவது தான் ஏகாக்ரத எனப்படுகிறது. புலனுணர்வுக் கான அனுபவங்களை விட்டு, புலனின்பங்களின் மேலுள்ள ஆசையை முற்றிலும் துறந்து, உயர்ந்த நிலையைப் பெற்ற மனம் தூய்மை யான இயல்பைப் பெறுகிறது. மனம் என் பதும் ஒரு பொருள்தான். ஜடப் பொருளோடு ஒப்பிடும் போது அது மிகவும் நுண்ணியது. உல கியல் இயல்புகள், வேட்கைகள், பேராசைகள் ஆகியவற்றால் நிரம்பியிருக்கும் போது அது தமோ குணமும் இரஜோ குணமும் நிரம்பியதாய் இருக் கிறது. அது செயலற்ற நிலையை ஒத்தது. அமைதி யின்மையும் தன்னலத்தோடு கூடிய ஆசைகளும் செயல்களும் இருப்பதால் அது மேலும் மோசமடை கிறது. அவைகளையெல்லாம் கடந்து, ஓரளவுக்கு வெற்றிகொண்ட பின்னர் மனம் தூய்மையானதும் நுண்ணியதுமான ஒரு நிலையைப் பெறுகிறது. அப் போது அது மேல் நோக்கிச் செல்லும் ஆற்றலை அடைகிறது, ஏனென்றால் மனம் எப்போதும் படுக் கைக் கோட்டிலேயே செல்லக்கூடியது.

நுண்மையும் தூய்மையும் பெற்ற பிறகே மனம் மேல் நோக்கிச் செல்லும் ஆற்றலைப் பெறுகிறது. தூய்மை, நற்பண்பு, புலனடக்கம், ஆசைகளையும் வேட்கைகளையும் நீத்தல் என்பனவற்றின் உதவி யால் தூய்மையும் நுண்மையும் பெற்ற அந்த மனம் தான் ஆன்மா அல்லது சத்தியத்தைப்பற்றி எண் ணக்கூடிய ஒரு கருவியாகப் பயன்படும். இல்லாவிடில் சாதாரணமாகத் தாழ்ந்த நிலையிலுள்ள மனதால் ஆன்மாவைப்பற்றி எண்ண முடியாது. தூய்மை யும் நுண்மையும் பெற்ற பிறகே ஆன்மாவைப் பற்றிச் சிந்திக்கும் ஆற்றலை மனதால் பெறமுடியும். அந்த மனம் தியானத்தில் ஈடுபடவேண்டும். தியா

னத்தில் ஈடுபட்டிருப்பதாக நினைப்பது உன் மன திலுள்ள ஒரு எண்ணமேயாகும்.

நிமிர்ந்த நிலையில் உட்கார்ந்துகொண்டு தியானத்தில் ஈடுபட்டிருப்பதாக நீ நினைத்துக் கொண்டிருக்கலாம். நீ மனதால் ஏதாவது ஒரு செயலைச் செய்துகொண்டிருக்கலாம். ஆனால் அது தியானம் அல்ல. தியானத்தில் ஈடுபட வேறுவித மான மனப்பான்மை வேண்டும். வெளியே நாட்ட முள்ளதும், பொருள்களோடு ஐக்கியமுள்ளதும், ஆசைகள் நிரம்பியதுமான மனதால் உண்மையில் தியானத்தில் ஈடுபடமுடியாது. மனதை ஒருமுகப் படுத்திக் கட்டுப்படுத்துவதற்கான சில பயிற்சிகளில் ஈடுபட்டிருக்கலாம். அது முற்றிலும் பயனற்ற தென்று சொல்லமுடியாது. அது எப்போதும் மனதைக் குறிப்பிட்ட முறையில் பழக்கும். ஆனால் மனதைத் தூய்மையான நுண்ணிய நிலைக்குக் கொண்டுவந்து உனக்குள்ளே முற்றிலும் மாறுதலை ஏற்படுத்துவதுதான் மிகவும் இன்றியமையாத தேவையாகும். அப்போதுதான் தியானத்தைத் தொடங்குவதற்கு மனம் ஒரு கருவியாகப் பயன் படும். தூய்மையானதும் நுண்ணியதும், அசை வற்றும் அமைதியாகவும் இருப்பதும், முற்றிலும் உள்நோக்கி இருப்பதுமான மனம்தான் தியானத் தில் ஈடுபடுவதற்கேற்ற கருவியாக உதவும். அம் மாதிரி மனம் படைத்தவர்கள்தான் உண்மையில் தியானத்தில் ஈடுபடமுடியும்.

---

## 10. குருவும் சீடனும்

குருகிருபை ஒரு விந்தையான, விளங்காத அம்சம். சாதகர்கள் வாழ்க்கையின் முழுப்பயனை ஆன்மீக உணர்வு அல்லது இறை உணர்வு அல்லது தெய்வ தரிசனம் அல்லது மோட்சத்தைத்தேடி அடைய அது உதவுகிறது. ஏற்றவனோ இல்லையோ, ஆன்மீக நெறியில் அதை அடைவதற்குத் தேவையான விதிகளுக்கு விலக்களித்து, மேலான பேரின்பத்தை அடைவதற்கு குருகிருபை உதவுகிறது. குரு கருணைமிக்கவர் என்று சொல்வது ஒரு சிறிதும் மிகையல்ல. குருகிருபை என்பது ஒருவரால் கொடுக்கப்படுவது மட்டுமல்ல. அது ஏற்றுக் கொள்ளப்படுவதுமாகும். அதை ஏற்றுக்கொள்வதால் நாம் நம்மை புனிதப்படுத்திக் கொள்வதோடு, அழியாத தன்மையையும் அடைகிறோம். குருவுக்குக் கீழ்ப்படிவதிலே இன்பமிருக்க வேண்டும். ''நான் கீழ்ப்படிய வேண்டும்'' என்று ஒரு வேட்கை இருக்கவேண்டும். ஒரு சீடனாக இருக்கவேண்டுமானால் கனவில்கூட பணிவுவேண்டும். பகலிலும், இரவிலும் கீழ்ப்படிதலாகிய மனப்பான்மை பூரண நிலையை அடைவதற்குப் பாடுபடுவதே நமது சாதனையாக இருக்கவேண்டும். இதுதான் சாதனையின் வெளிப்படையான பகுதியாகும்.

சீடனைப் பொறுத்தவரை, அவன் குருவை மனித இயல்புகளை மட்டும் படைத்தவராகக் கருதக் கூடாது. அவருடைய மனித இயல்புகளை முற்றிலும் மறந்துவிட்டு, அவரிடத்திலுள்ள தெய்வீக இயல்புகளை மட்டும் எண்ணிப்பார்க்க வேண்டும். அப்பொழுதுதான் அவருடைய கிருபை நமக்குக் கிடைக்கும். அந்தக் கிருபை நம்மைத் தாழ்ந்த நிலையிலிருந்து மிகமேலான தெய்வீக

நிலைக்கு உயர்த்திவிடும், குருவோடு நமக்குள்ள தொடர்பு தெய்வீகமானது; ஆன்மீகமானது.

அதேமாதிரி ''நாம் அழியாத ஆத்மாக்கள்; நாம் சச்சிதானந்த சொரூபங்களே,'' என்ற உணர்வை முதலில் வளர்த்துக்கொள்ள வேண்டும். நாம் அந்த சச்சிதானந்த உணர்வை குருவிடம் கேட்டுப்பெற குருவால் அந்த உணர்வை நமக்குக் கொடுக்கமுடியும்.

ஆன்மீக உலகில் பொறுமையும் 'அடக்கமும் பல்லாண்டு காலம் நீடித்திருக்க வேண்டும். தேவை யானால் குருவின் வீட்டு வாயிற்படியில் ஒரு நாய் போல வாழ்நாள் முழுவதும் காத்திருக்கவேண்டும். அதனால் நமக்கு நஷ்டமொன்றுமில்லை. ஏனெனில் நம் இலட்சியம் அமரவாழ்வும் விடுதலையுமே ஆகும்.

அடக்கத்துடன் குருவினிடமே யாவற்றையும் விட்டுவிடுவதுதான் மிகவும் சிறந்தது. ''நான் உண்மையான சீடனோ அல்லவோ எனக்குத் தெரியாது. எனவே கருணைக் கடலாகிய குருவே! என்னைத் தகுதியுள்ள ஒரு சீடனாக மாற்றுங்கள். என்னைச் சீடனாக மாற்றும் முமுட்சுவத்தை எனக் குள் உண்டாக்குங்கள். விருப்பத்துடன் கீழ்ப் படியும் மனப்பான்மையை எனக்கு அளியுங்கள். தாங்கள் உருவாக்கியபடி நான் என்னை மாற்றி அமைத்துக்கொள்வதற்கு எனக்கு உதவுங்கள்''— இதுதான் நம்முடைய இடைவிடாத பிரார்த்தனை யாக இருக்கவேண்டும். இம்மாதிரி பிரார்த்தனை யினால்தான் குருகிருபையைப்பெற்று, நம் வாழ்க் கையைப் பயனுள்ளதாய் செய்துகொள்ள முடியும். கீழ்ப்படிந்து நடப்பதும், உண்மையான சீடர்களாய் இருப்பதற்கு முயற்சி செய்வதும்தான் மிகச்சிறந்த பிரார்த்தனை.

---

## 11. மதம்

வாழ்வு ஒன்ருக இருக்கும்போது, உயிர்கள் அனைத்தும் ஒன்றே. உயிர்கள் அனைத்தும் ஒன்ருக இருக்கும்போது, மக்கட் கூட்டமும் ஒன்றுதான். ஆன்மீக உலகில் ஒற்றுமைதான் விதி. வெளிப் படையாகப் பிரபஞ்சத்தின் தோற்றத்தில் வேற்றுமை இருந்தாலும், உண்மையில் ஒற்றுமை அல்லது ஒருமைப்பாடுதான் இருக்கிறது. மக்கள் இனம் ஒன்றுதான். பிரபஞ்சம் முழுவதிலுமுள்ள மக்கள் கூட்டத்தின் ஒற்றுமை ஒருபக்கம் இருக் கிறது. அடுத்து இறைவனைப்பற்றிப் பேசும்போது, ஞானிகள் 'ஏகம் ஏவ அத்விதியம் ப்ரம்ம:'— 'இறைவன் ஒருவனே' என்று சொல்லியிருக்கிருர் கள். பரந்துகிடக்கும் பொருளானது இந்த ஒற்றுமையிலும் பங்குகொள்ள வேண்டும். இந்த நோக்கத்தோடும், மனப்பான்மையோடும், கருத் தோடும் மதத்தைப்பற்றிப் பேசும்போது, மதம் என்பது ஒன்றுதான் என்றே சொல்லவேண்டும். பல்வேறு மதங்களுக்கு இடையிலேயும் அநேக வேறுபாடுகள் இருப்பதுபோல் காணப்பட்டாலும், அவற்றின் உள்ளமைப்பு ஒன்ருகவேதான் இருக்க வேண்டும்.

துன்பமும் மரணமும் உள்ள இந்த உலக வாழ்க்கையோடு மனிதனைப் பிணைக்கும் பல்வேறு தளைகளிலிருந்தும் அவனை விடுவிப்பதே மதம். நேர் மையற்ற இயல்பால் வருத்தம் நேருமாஞல், நேர் மையோடு இரு. இந்த அழியக்கூடிய வாழ்க்கை யோடு அசத்தியத்திஞல் கட்டுண்டிருந்தால் சத்தி யத்தைக் கடைப்பிடி; பொய்மையை அகற்றி, அத ஞல் பெறும் தண்டனையாகிய துன்பத்தையும், வருத் தத்தையும் தவிர்த்து விடு; சத்தியத்தைக் கடைப் பிடி. கொடுமையிஞல் துன்பப்பட வேண்டியிருந்

தால், சித்திரவதைப்பட வேண்டியிருந்தால், வருத்தப்பட வேண்டியிருந்தால் கொடுமையைத் தவிர்; அஹிம்சையைக் கடைப்பிடி; அன்போடிரு; பரிவைக் காட்டு. எனவே ஒழுக்கம் மதத்தைச் செயல்முறையில் அனுசரிப்பதற்கு உதவுகிறது. எனவே மதம் என்பது நீ இந்த உலக வாழ்க்கையோடு பிணைக்கப்பட்டிருக்கும் தளைகளையும் அதன் துன்பங்களையும் வருத்தங்களையும் விஞ்ஞான ரீதியாகக் காரண காரியங்களோடு ஆராய்கிறது. 'நடைமுறைக்கேற்ற மதத்தை அனுசரிப்பதால், துன்பத்தைக் கொடுக்கக் காரணமாகவுள்ள எல்லாவற்றையும் போக்கி விடலாம்' என்று கூறுகிறது. எனவே நாம் துயரமான அனுபவங்களையும், வாழ்க்கையையும் கொடுக்கும் செயல்களில் ஈடுபடாமல், கவனத்துடன் வாழ வேண்டும்.

மதம் வாழும்முறை ஒன்றை உனக்குச் சிறிது சிறிதாக அமைத்துக் கொடுக்கிறது. அதனுல் உனக்குள்ளே இருக்கும் தெய்வீக இயல்புகளை வெளிப்படையாக நடைமுறையில் வெளிப்படுத்தச் செய்கிறது. அதன் விளைவாக மிருக இயல்பை வென்று உன்னுடைய உள்ளுணர்வின் (ஆன்மீக இயல்பின்) சிறந்த பகுதியை அல்லது தெய்வீக இயல்பை படிப்படியாகத் தோன்றச் செய்கிறது. மனிதன் இறைவனுடைய உருவத்தில் படைக்கப் பட்டிருக்கிருன். எனவே அவனுடைய உண்மையான உள்ளியல்பு இறைத்தன்மையே ஆகும். ஆகையால் வெளிப்படையான செயலான தாழ்ந்த இயல்பை வென்று அகற்றி விடவேண்டும். அப்பொழுதுதான் தெய்வீக ஸ்வரூபம் அல்லது உருவம் வெளிப்பட வழி ஏற்படும். தெய்வீக உணர்வு வெளிப்பட்டு மலரும்போது, முடிவற்ற பரந்த தெய்வீகத் தோற்றமாகிய சத்—சித்—ஆனந்தத்துடன் இணைகிறது. அறியாமையினுல் தற்காலிக

மாக மறைக்கப்பட்டிருந்த இந்த இணைப்பு, மறுபடியும் ஏற்படுத்தப்படுகிறது. இந்த மத ஆராய்ச்சியின் நிறைந்த முடிவாக ''இந்த உடல் நானல்ல, புலன்கள் நானல்ல; மனமும், அறிவும் கூட நானல்ல: நான் சச்சிதானந்த பிரம்மன்'', என்று அவன் கூற வேண்டும். உன்னுடைய அனுபவத்தின் விளைவாகவும், இறைவனோடு நீ ஏற்படுத்திக் கொள்ளும் ஆன்மீக ஒருமைப்பாடாகிய மத நெறியின் முடிவாகவும் இது தோன்றுகிறது.

நீ இந்த வாழ்வோடு கட்டுண்டு கிடக்க வேண்டுமென்று எந்த மதமும் கூறவில்லை. நிறைவு, விடுதலை, அமரநிலை ஆகியவற்றைப் பெறுவதுதான் எல்லா மதங்களின் குறிக்கோளாகும். சடங்குகளிலும், பழக்க வழக்கங்களிலும் எவ்வித வேறுபாடுகள் இருந்தாலும், மதங்கள் அனைத்திலும், உள்நெறி ஒரே மாதிரியாகத்தான் இருக்கின்றது. உண்மையான மதம், மனிதனுடைய தாழ்ந்த இயல்பாகிய மிருக உணர்வை அழித்து, அவனுடைய தெய்வீக இயல்பைச் சிறிது சிறிதாக வெளிப்படுத்த வேண்டும் என்று விரும்புகிறது. எனவே ஆரம்பத்திலிருந்தே எல்லா மதங்களின் அடிப்படைக் கொள்கையும், இறுதி இலட்சியமும் ஒன்ருகவே இருக்கின்றன.

நீதி நூல்களான உபநிஷதங்கள், வேதங்களிடமிருந்தும் அல்லது இறைவனை அடைவதற்கான வழியை அவனருள் பெற்ற ஞானிகளான பெரியவர்களிடமிருந்தும் மதங்கள் தோன்றின. அவற்றை ஊன்றிக் கவனித்து, இயேசு, முகம்மது, ஜோராஸ்டர், புத்தர் ஆகியவர்களின் இறை அருள் நிறைந்த வாழ்க்கை வரலாற்றையும், உலக மதங்கள் அனைவற்றின் முக்கியமான தலைவர்களையும் ஆராய்வோமாஞல் அவர்களுடைய நடை

முறை உதாரணங்களாலும் மேலான வாழ்க்கையாலும், அவர்கள் மக்களுக்கு எடுத்துக் கூறியுள்ள மதங்களின் உட்கருத்து என்ன என்று கூறியிருப்பது நன்ருக விளங்கும். பின்ஞல் அவர்களைப் பின்பற்றியவர்களுக்கு அளித்த மதங்களின் நடைமுறை வாழ்க்கையைப் பார்க்கும்போது மதம் என்பது அனைவருக்கும் ஒன்றேதான் என்பதை நாம் நன்கு உணர்ந்து கொள்ளலாம்.

இந்த தேவ தூதர்களால் கூறப்பட்ட அருள் வாக்குகளில் சிலவற்றைப் பார்ப்போம். எந்த மதமாவது ''பொய் சொல்லு. நேர்மையற்று இரு; மக்களை வெறு. கோபத்தையும் விரோதத்தையும் வளர்த்துக்கொள். தூய்மையற்று இரு. ஒழுக்கம் தவறி நட'' என்று கூறுகிறதா? இல்லை சத்தியம், தூய்மை, பரிவு, அன்பு, பக்தி, கருணை, தியாகம், மனம், மொழி, மெய் ஆகியவைகளில் நேர்மை ஆகிய இயல்புகளோடு கூடிய வாழ்க்கையைத்தான் எல்லா மதங்களும் வலியுறுத்திக் கூறுகின்றன. ஒவ்வொரு மதமும், அதைப் பின்பற்றுகின்றவர்களுக்கு இலட்சியமாக ஒரு வாழ்க்கை நெறியைக் கூறுகிறது. அதனுல் இறுதியில் அழியாப் பேரின்பத்தையும், பிறப்பு, இறப்பு, நோய், துன்பம் ஆகியவற்றிலிருந்து விடுதலையும் பெறலாம். பெரிய மதங்கள் அனைவற்றிலும் பின்பற்ற வேண்டிய நெறி ஒன்றுதான். அது ஒவ்வொரு தீர்க்கதரிசியும், ஞானியும், அறிவாளியும் நடைமுறையில் வாழ்ந்து காட்டிய தூய்மையும், பக்தியும் நிறைந்த வாழ்க்கைதான்.

எனவே மதத்தையும், ஆன்மீக நெறியையும், எந்தக் கோணத்திலிருந்து நெருங்கிஞலும், படித்தாலும், பார்த்தாலும், எல்லா மதங்களிலும் அடிப்படையான கொள்கை ஒன்ருகவே இருப்

பதைக் காணலாம். மதங்கள் அனைத்தும் ஒன்றே. பெரியவர்களான தீர்க்கதரிசிகள் அனைவரும் பூரண மான தெய்வீகக் கருணையும், இனிமையும் மனித குலத்தின் ஒன்றுபட்ட தன்மையை அறிந்த இயல் பும் நிறைந்த வாழ்வு நடத்திக்காட்டி இருக்கின்றார் கள். நாம் இதை அறியாதவர்கள்போல் இருந் தாலும், ஒவ்வொரு மதமும் அதனுடைய நோக் கத்தை எடுத்துக் கூறுகையில் இந்த உண்மையை மறுக்கமுடியாதபடி மனதில் பதியும்படியாக விளக்கமாக எடுத்துக் கூறுவதைக் காண்கிறோம். மதங்கள் கூறும் அடிப்படை நெறிகளிலும், அதைப் பின்பற்றுபவர்கள் அடையவேண்டிய இறுதி இலட்சியத்திலும் ஒற்றுமை இருக்கிறது. எல்லாம் வல்ல இறைவனுக்கு நாம் அளிக்கும் மலர்ச்செண்டி லுள்ள பல்வகையான அழகான மலர்கள்தாம் பல்வேறு மதங்கள்.

---

## 12. துறவறத்தின் சிறப்பு

சத்தியத்தை நாடுபவர்களாகிய நாம் வாழ்க் கையில் துறவறம் இருவகையான வழிகளில் செயலாற்றுகிறது என்பதை நினைவில் கொள்ள வேண்டும். ஆன்மீக நெறியைப் பொறுத்தவரையில் மிகவுயர்ந்த நிவிருத்தி உணர்வோடு செயல் படுகிறது. அதாவது உருவங்களையும் பெயர்களை யும் முற்றிலும் புறக்கணித்து, அவைகளுக்கு அப்பாற்பட்ட பேருண்மையாகிய பிரம்மம் அல்லது ஆன்மாவையே மிகவும் சிறந்த முறையிலும், பயனுள்ள வகையிலும் வலியுறுத்துவது. வேதாந்த சாதனையினல் விளையும் மிகச் சிறந்த பயன்தான் இது. பாரத வர்ஷத்தின் பண்பாட்டின் மிக

உயர்ந்த மையப்பகுதியும் இதுதான். இந்துமத ஞானிகளின் கருத்துக்கிணங்க இதுதான் மனித வாழ்க்கையின் மிகவுயர்ந்த ஒரே குறிக்கோள் ஆகும். இந்தப் பேரானந்தப் பெருவெள்ளத்தில் மூழ்கிக் களித்திருக்கவேண்டி இந்த பௌதிக பிரபஞ்சத்தைத்தவிர மிகப்பரந்த சச்சிதானந்த சாகரத்தில் சிறு புள்ளிபோல் அமைந்துள்ள எண்ணற்ற பிரபஞ்சங்களும்கூட மறுக்கப்பட்டிருக் கின்றன.

இந்த உயர்ந்த முடிவையும், குறிக்கோளையும் அடைவதற்காக, நம்முடைய முன்னோர்களான ஞானிகளும், முனிவர்களும், நம் சமுதாய வாழ்க் கையில் நான்குவகை ஆசிரமங்களைப் பின்னிப் பிணைத்து உள்ளனர். அவையாவன — பிரம்மச் சரியம், கிரகஸ்தம், வானப்பிரஸ்தம், சன்னி யாசம் என்பன. அதனால் இந்த உணர்வு படிப் படியாக ஒருவனுடைய வாழ்வில் மலர்ச்சி பெறு கின்றது.

பிரம்மச்சரியம் அல்லது மாணாக்க நிலையில், ஒருவன் தன்னுடைய குருவுடன் வாசம் செய்து கொண்டு, தன்னுடைய எண்ணங்களை நிலைபெய ராமல் கட்டுப்படுத்தி மதசம்பந்தமான நூல்களைப் படிப்பதிலும், தன்னடக்கத்தோடு வாழ்வதிலும், தூய்மை, எளிமை, சிக்கனம், படிப்பில் கவனம், குருவிடம் கீழ்ப்படிதலும், அவருக்குத் தொண்டு செய்தலும் ஆகியவற்றில் முழுநேரத்தையும் செல விட வேண்டும். அடுத்த நிலையில் ஒரு இலட்சிய, இல்லறவாசியாக, தன்னலமின்மை, தியாகம், தன்னையே அழித்துக் கொள்ளல், ஆகியவற்றைத் தன் கொள்கைகளாகக் கொண்டு வாழ்கின்றான். இது வானப்பிரஸ்தம் என்னும் அடுத்த நிலைக்குத் தயார் செய்து கொள்ள உதவுகிறது.

அதில் சன்னியாச ஆசிரமத்தை மேற்கொள்வதற் குரிய நிலைக்குத் தன்னைத் தயார் செய்து கொள் கிறான். சன்னியாச வாழ்க்கையில் தியானமும், தன் வாழ்க்கைக்குத் தேவையான உணவைச் சேகரிப் பதும்தான், சமூகத்துக்கும், நாட்டிற்கும், குடும் பத்துக்கும், நண்பர்களுக்கும் ஆற்ற வேண்டிய கடமைகளைச் செய்து முடித்த ஒரு மனிதனுக்குரிய கடமைகள் அல்லது தர்மங்களாகக் கூறப்பட்டுள் ளன. ஆன்மாவையும், ஆன்மீகத் தெளிவையும் பற்றி தியானத்தில் ஈடுபடுவதைத் தவிர வேறொரு விதமான பந்தமோ, பற்றோ அவனுக்குக் கிடை யாது. எனவே சமுதாய நிலைகளில் இறுதியாக இருக்கும் சன்னியாச வாழ்க்கையில் ஆன்மாவை முடிவுள்ள நிலையிலிருந்து முடிவற்ற ஒரு நிலைக்கு உயர்த்தும் ஒரு உயர்ந்த நோக்கம் இருக்கிறது. எல்லாவிதமான பந்தங்களையும், பாசங்களையும் உதறி எறிந்துவிட்டு, உயர்ந்த ஒரு மாற்றத்தை ஒவ்வொரு ஆன்மாவும் பெறும் நிலை இதுதான். இரட்டை வாழ்க்கையையும் தனக்கும் இறைவனுக் குமுள்ள வேறுபாடு என்னும் மாயையும் இவ்வுலக வாழ்க்கையாகிய போலித் தோற்றத்தையும் உடைத்தெறிந்து விட்டு ஆன்மீகத் தெளிவு என் னும் பேரொளியில் உயரப் பறந்து செல்கிறது.

ஒருவரின் உள்ளத்தின் தூண்டுதல்தான், சன் னியாச வாழ்க்கையின் ஆன்மீக நிலையாகும். அதற் குச் சமூகத்தில் எந்த நிலையும் கிடையாது. அது இவ்வுலகத்தின் மாயத் தோற்றத்தின் அழியும் தன் மையையும், என்றும் நிலைத்திருக்கும் சத்தியத்தின் இயல்பையும் நன்குணர்ந்த ஜீவன் பெற விரும்பும் ஆன்மீகத் தெளிவுக்காக அதற்கேற்படும் ஆவல், வேட்கை ஆகியவற்றின் தீவிரத்தைப் பொறுத்து இருக்கின்றது.

சன்னியாச வாழ்க்கையில் மிக உயர்ந்தவை களும், சிறந்தவைகளுமான பண்புகளின் நிலைக் களாக விளங்கும் தெய்வீக ஞானிகளை உற்றுக் கவனிப்போமானால், சன்னியாசம் என்பதன் உண் மையான பொருளையும், பெருமையையும் நன்கு உணரலாம். அதற்கு உண்மையான எடுத்துக் காட்டாக சன்னியாசமே உருவெடுத்து வந்தாற் போல் இருக்கிறார்கள். உண்மையான சன்னியாச நிலைக்கு மிகச் சிறந்த உதாரணமாக குருதேவர் சுவாமி சிவானந்த மஹராஜ் அவர்களையே சொல்ல லாம். அவருடைய ஒவ்வொரு செயலும் உண்மை யான துறவுக்குச் சிறந்த விளக்கமாக அமைகின்றது.

வாழ்க்கைப் போராட்டத்தைச் சமாளிக்க முடியாத காரணத்தால், அதினின்றும் தப்பிச் சென்று அமைதியான ஓரிடத்தில் ஒதுங்கி இருந்து விடுவதுதான் சன்னியாசம் என்று தவறாகக் கருதப் படுகிறது. இம்மாதிரி சன்னியாசம் கண்டிக்கத் தக்கது. சன்னியாசம் என்பது அளவற்ற வலிமை பொருந்தியது. உலக வாழ்க்கைப் போராட்டத் திலிருந்து தப்பிச் செல்வதால், ஒருவன் தன் பிரா ரப்தத்தினின்றும் தப்பிவிட முடியாது. கர்மாவின் விதியைப்பற்றி அறியாதவர்கள் கொண்டுள்ள ஒருவித மாயை அல்லது மயக்கம்தான் இது. நன்கு உணர்ந்தவர், வாழ்க்கைப் போராட்டத்திலிருந்து தப்புவதற்காக, கடுமையான சன்னியாச நிலையை மேற்கொள்ள மாட்டார். அவர்கள் மிகவும் மோசமான தவறு செய்கிறார்கள் என்பதை அவர் கள் விதியே உணர்த்திவிடும். இந்தக் கடமைகளே அவர்களுடைய துறவற வாழ்க்கையில் சிறிதும் ஈவிரக்கமின்றி அவர்கள் முன்தோன்றும். அவற்றை அவர்கள் வட்டியும் முதலுமாகச் செய்து முடிக்க வேண்டி நேரிடும்.

சன்னியாசம் வீரத்தன்மையை அடிப்படையாகக் கொண்டது. வாழ்க்கையின் உண்மை நிலையை உணர்பவனும், உலகிலுள்ள பொருள்கள் அனைத்தும் அழியக்கூடியவை என்று அறிபவனுமே, அத்யாத்மிகமாகிய போர்க்களத்தில் உண்மையான போர் வீரனுவான். உலகம் பொய்யானது என்ற உறுதியுடன், புலனின்பப் பொருள்களின் மேலுள்ள பற்றை வென்று தன்னுடைய இயல்புகளையே எதிர்த்து வெல்ல வேண்டிய மிகப் பெரிய போராட்டம் ஒன்றை நடத்த வேண்டிய சூழ்நிலையில் இருக்கிருன். ''நான் அழகாக இருக்கிறேன்; அறிவு மிக்கவன்'', என்ற தன்னைப்பற்றிய உணர்வுகளையும், சாதாரண மனிதன் ஒருவனைச் சுற்றியும், பற்றியும் நிற்கும் கூட்டங்களையும், தொடர்புகளையும் நீக்கிக் கொள்வதைப் போன்ற கடினமான செயல் வேறொன்றும் இல்லை. அவைகளுக்குப் பதிலாக, ''இந்த உடல் நானல்ல; இந்த மனமும் நானல்ல. நான் சச்சிதானந்த ஆத்மா; நான் எங்கும் நிறைந்திருக்கிறேன்; நான் முடிவற்றவன்: பிறப்பு இறப்புகளுக்கு அப்பாற்பட்டவன்; எனக்கு அளவற்ற ஆற்றல் உள்து'' என்ற மேலான உணர்வை ஏற்படுத்திக்கொள்ள வேண்டும். அது தான் உண்மையான வீரத்தன்மை. இதைச் செய்ய முயலும்போது, ஜீவன் கோடிக்கணக்கான பிறவிகளில் தன்னுடன் சேர்த்துக்கொண்டுள்ள மிகப் பழைய உணர்வுகளை எதிர்த்துப் போராட வேண்டியிருக்கும். இது ஒரு நாளில் முடியும் போராட்டமல்ல. அது வாழ்க்கை முழுவதும் நடத்தவேண்டிய போராட்டம். பலசமயங்களில் தோல்வியுற்று வீழ்ச்சி அடையவேண்டி இருக்கும்.

கோழையாக இல்லாமல் இருப்பதுதான் சன்னியாசியின் வீரத்தனம் ஆகும். தோல்வியையோ பின்வாங்குவதையோ அவன் ஒத்துக்கொள்வதில்லை.

அவனைப்பொறுத்த வரையில் இந்தப் போராட்டத்தின் ஒவ்வொரு நிலையும், அவனுடைய உன்னத இலட்சியத்திற்கு அருகில் அவனை அழைத்துச் செல்லும் ஒவ்வொரு படியாகும். இந்த உன்னத இலட்சியத்தை அடைந்தவுடன், ''தேஹோ நாஹம்; ஜீவோ நாஹம்; ப்ரத்யகபின்ன ஆத்மைவஹம் — நான் இந்த உடலல்ல, நான் இந்த ஜீவனுமல்ல. உள்ளே பிரிக்கமுடியாமல் இருக்கும் ஆத்மாவே நான்,'' என்று உறுதியாகச் சொல்வான். ஒவ்வொரு தடவை செய்யும் முயற்சியும் வெற்றியே தவிர தோல்வியில்லை.

சன்னியாசி ஒருவனின் வாழ்க்கை மேலான தியாகம் அல்லது முற்றிலும் ஆசைகளற்ற தன்மையை அடிப்படையாகக் கொண்டது. அவன் இந்த பௌதிக வெளி உலகத்தின் மேலுள்ள ஆசைகள் அனைத்தையும் விட்டுவிட வேண்டும். சுவர்க்கத்திலுள்ள மிகவுயர்ந்த இன்பத்தைக்கூட விட்டுவிட வேண்டும். ஒரு சன்னியாசி புல்லின் இதழிலிருந்து மிகவுயர்ந்த பிரம்மம் வரை அனைத்தும் தூசாகக் கருதுவான். அவைகளுக்கு அப்பாற்பட்டு, தன்னுடைய ஆன்மீகத் தன்மையை வலியுறுத்திக் கொள்கிறுன். எனவே அவனுடைய வாழ்க்கை, துறவையே அடிப்படையாகக் கொண்டது. புகழ்ந்தாலும், கண்டித்தாலும், மரியாதை காட்டினுலும், இகழ்ந்தாலும் தன்னுடைய உடலைப்பற்றி அதிகம் அக்கறை கொள்வதில்லை. ஆன்மீக உணர்விலேயே வாழ எப்பொழுதும் முயல்கிறுன். இதை எண்ணிப் பார்த்து நீ எவ்வாறு இருக்கின்ருய் என்பதை முடிவு செய்து கொள்.

ஒரு சன்னியாசியின் வாழ்க்கை முழுத்துறவு, பரம்பொருளை அடையக் கொழுந்துவிட்டெரியும் ஆவல், அப்பழுக்கற்ற தூய்மை ஆகிய மூன்றையும்

அடிப்படையாகக்கொண்டது. முற்றிலும் துறப்பது எதிர்மறைச் செயலையும், ஆன்மீக வேட்கை ஆக்கச் செயலாகிய இடையில் உள்ளதையும், தூய்மை அவனுடைய வாழ்க்கைக்கேற்ற நிலையையும் குறிக்கின்றன. சன்னியாசியாகிய பாத்திரத்திற்குள் தெய்வீக உணர்வு இறங்குவதற்கு இன்றியமையாத முதல் தேவை தூய்மைதான். இந்த சன்னியாச வாழ்க்கையையே முன்மாதிரியாகக்கொண்டு இடைவிடாது போராடி காம — க்ரோத — லோப — மத — மாச்சரிய நோயாகிய அகந்தையோடு கூடிய மயக்கத்தினின்றும் வெளிப்படுவோமாக. சன்னியாசம், பிரம்ம சிந்தனை ஆகியவைகளை நன்கு உணர்வதால் சம்சாரமாகிய நோய் தீரும். எல்லா வகையான துன்பமும் வருத்தமும் நீங்கவேண்டுமானால் சன்னியாசத்தை மேற்கொள்ள வேண்டும். நம் வாழ்க்கையில் அமைதியும் ஆனந்தமும் சுடர் விட்டுப் பிரகாசிக்க வேண்டுமானால், சன்னியாசம் ஒன்றுதான் அதற்குச் சிறந்தவழியாகும். உலகிலுள்ள துன்பங்கள், சண்டைகள், சச்சரவுகள், பிரச்சினைகள், போர்கள், விரோதங்கள் ஆகியவைகளுக்கு மூலகாரணம் தன்னலம் கருதும் மனப்பான்மையே ஆகும். உலகெங்கும் காணப்படும் எல்லாவகைத் துன்பங்களுக்கும், துயரங்களுக்கும் காரணம் மனிதன் எல்லாவற்றையும் தானே அடையவேண்டும் என்றும், மற்றவர்களுக்கு என்ன நேர்ந்தாலும் கவலைப்படாமல் தன்னுடைய ஆசைகளை நிறைவேற்றிக்கொள்ள வேண்டும் என்றும் எண்ணும் அசுரத் தன்மைதான். சன்னியாசம் இந்த அசுரத் தன்மையை வேரோடுகளைந்து எறிந்து விடும். ஏனென்றால் சன்னியாசம் என்பது தன்னலத்தைத் துறப்பதேயாகும். அப்போது எல்லாவற்றையும் துறந்து விடுகிறோம். அதாவது ஆசைகள் அனைத்தையும் துறந்து விடுகிறோம். எனவே சன்னியாசம் என்பது ''முற்றிலும் ஆசைகளற்ற நிலை''

என்று எளிதாகக் கூறிவிடலாம். இதைக்கொண்டு உன் வாழ்க்கையை ஆராய்ந்து அளவிட்டு உன்னுடைய உண்மையான நிலை என்ன என்பதைக் கணக்கிட்டுப்பார். பிறகு புதிய மனவுறுதியுடன் முன்னேற்றத்திற்காகத் தைரியத்துடன் முயற்சிசெய்.

ஆன்மீக வேட்கையுள்ள சாதகனும், அக்கரையுள்ள சன்னியாசியும் இரண்டு விஷயங்களைத் தவறாமல் கவனிக்க வேண்டும். அவை வேதசாஸ்திரங்களில் சன்னியாசத்தைப் பற்றிக் கூறப்பட்டுள்ள கருத்துக்களும், இந்த நாட்டில் தொன்று தொட்டு அனுசரிக்கப்பட்டு வந்துள்ள உன்னதமான நடைமுறைச் சன்னியாச வாழ்க்கையுமாகும். உண்மையான இந்து ஒருவன் சன்னியாசத்தை எவ்வாறு கருதுகிறான்? சன்னியாசம் என்பது ஒரு மனிதனின் வாழ்க்கையிலுள்ள நான்காவது நிலையாகும். இந்த ஆசிரமத்தில் புகும் ஒருவன் குருவினிடம் தீட்சை பெற்று விரஜா ஹோமம் செய்கிறான். இந்த விரஜா ஹோமம் தான் ''சன்னியாசம் என்றால் என்ன? என்ற வினவிற்குச் சரியான விடை அளிக்கிறது. விரஜா ஹோமம் 'சன்னியாசம்' என்பதன் உண்மையான பொருளைத் தெளிவாக விளக்குகிறது. முழுத்துறவாகிய கொழுந்து விட்டெரியும் நெருப்பில் எல்லா வகையான ஆசைகளையும் பற்றுகளையும் எரித்து விடுவதே சன்னியாசம். ஒரு மகத்தான புத்துணர்வு வெளிப்படுவதையே அது குறிக்கிறது. விரஜா ஹோமத் தீயில் தன் உடல், மனம், புலன்கள், பிராணன் ஆகிய அனைத்தையும் அர்ப்பணித்துவிட்ட சன்னியாசியின் உணர்வு, ''நான் இந்த உடலுமல்ல, மனமுமல்ல; நான் அழியாத அமர ஆத்மா'' என்ற தெளிவை அடைகிறது. அது ஒரு மேலான துறவு; எல்லாவற்றையும் துறந்த சர்வ பரித்தியாகம் ஆகும். ''இந்த உலகத்து இன்பங்கள் அனைத்தையும் துறந்து விடு

கிறேன். ஆவியுலக இன்பங்களையும் சுவர்க்கலோக இன்பங்களைம் கூடத் துறந்து விடுகிறேன்'' என்பது அவருடைய தினசரி விரதமாகிறது.

இங்கும் இ த ற் கு ப் பிறகு எங்கும் ஆசைகள் அனைத்தும் அழிக்கப்படுகின்றன. இச்சமயத்தில் நமக்குத் திகைப்பூட்டும் வகையில் வேருெரு உண் மையும் வெளிப்படுகின்றது. மேற்கூறிய விரதத் தைத்தவிர, புதிதாக ஒரு வி ர த மு ம் காணப்படு கிறது. அதாவது ''நான் எவருக்கும் அச்சத்தை உண்டாக்க மாட்டேன்'', என்று சன்னியாசி கூறு கிருர். எல்லா உயிர்களுக்கும் அச்சமற்ற தன்மை யைப் பற்றி உறுதியை அளிக்கிருர். எனவே எந்த உயிரும் அவர் தனக்குத் தீங்கிழைத்து விடுவாரோ என்று அஞ்ச வேண்டியதில்லை. அவர் விஸ்வ பிரேமை அல்லது பரந்த அன்பு என்ற விரதத்தை மேற்கொள்கிருர். தீங்கு அல்லது துன்பம் ஏற் படும் என்ருல்தான் அச்சம் ஏற்படும். வெறுப்பும் விரோதமும் இருந்தால்தான் தீங்கும் துன்பமும் உண்டாகும். அன்பைக் கோயிலில் வைத்து வழி படும் இடத்தில் தொண்டும் இன்பமும் ஆருகப் பெருகும். உயிர்களனைத்தும் உறுதியுடனும் நம்பிக் கையுடனும் அதில் பங்கு பெறலாம். இந்தப்பரந்த அன்பும் தொண்டும் மேன்மையான தன்னலத்துற வின் காரணமாகத் தாமே இயல்பாகத் தோன் றியவை. எனவே பெயர், புகழ், பரிசு ஆகியவை களைப்பற்றிய ஆசைகளின் தியாகம், நோயாளிகள், ஏ ழை க ள், எளியவர்கள் ஆகியவர்களுக்குச் சேவை என்னும் இருவகையான உயர்ந்த பண்புகள் தாம் சன்னியாசத்தின் மேன்மையான சிறப்புகள். தியாகம் என்பது ஆத்ம சாக்ஷாத்காரம் அல்லது ஆன்மீகத் தெளிவு பெறுவதற்கான தேவையாகும். எனவே சேவையும், ஆன்மீகத் தெளிவும் உண்மை யான சன்னியாசி ஒருவரின் வா ழ் க் கை யி ல்

இரட்டை உணர்வுகளாக இயங்கி, பரம் பொரு ளாகிய சத்தியத்தை நோக்கி அவரை அழைத்துச் செல்கின்றன.

---

## 13. தெய்வீக வாழ்க்கை

தெய்வீக வாழ்க்கை என்பது நமக்குள்ளே இருக்கும் ஆன்மீக உணர்வு வளர்ச்சியடைந்து முன்னேற்றம் அடைவதற்குரிய நெறியாகும். தன்னலங்கருதாமை, தொண்டு மனப்பான்மை, பக்தி, வழிபாடு, புலன்களின் கட்டுப்பாடு, மனத்தை ஒருமுகப்படுத்துதல், தியானம் ஆகியவை களோடு கூடிய வாழ்க்கை முறையே தெய்வீக மானது. ''நான் யார்?'' ''நான் என்பது எது?'' என்ற இடைவிடாத சிந்தனை இருக்கவேண்டும். அதனுல் ''நான் இந்த உடலுமல்ல, மனமுமல்ல, புத்தியுமல்ல; பெயரும், உருவமுமற்ற, பிறவாத, இறவாத, அழிவற்ற, என்றும் நிலேத்திருக்கும் மிக மேலானதாகக் கருதப்படும் சச்சிதானந்த ஸ்வரூபமாகிய ஆன்மாதான் நான். அதைத் தவிர வேறொன்றுமில்லே,'' என்ற எண்ணம் உறுதிப் படும்.

சத்தியம், தூய்மை, செம்மை, எளிமை, பணிவு, நன்னடத்தை, நற்குணம், தன்னடக்கம், ஆசைகளேத் துறத்தல் ஆகியவைகளே அடிப்படை யாகக் கொண்டு அமைந்த ஆன்மீக வாழ்க்கையில், தன்னுடைய கடமைகளிலும் செயல் முறைகளிலும் கண்ணும் கருத்துமாக ஈடுபட்டிருக்கும்போதுகூட இறைவன் ஒருவனேயே தன்னுடைய இலட்சிய மாகக் கொண்டிருக்கின்ருன். அந்த உயர்ந்த இலட்சியத்தை எப்பொழுதும் நினேவில் நிறுத்திக் கொண்டு, இறைவனே அன்போடும் நம்பிக்கை

யோடும் இடைவிடாது எண்ணிக்கொண்டு, எல்லா உயிர்களிடத்தும் இறைவன் தோற்றமாயிருப்பதை உணர்ந்து, உன் செயல்கள் அனைத்தையும் வழி பாட்டு உணர்வுடன் மேற்கொண்டு, தன்னலங் கருதாமை, தொண்டு, பக்தி, வழிபாடு, மன அடக்கம், தியானம், இடைவிடாத ஆன்மீக விசாரணை ஆகியவற்றின் உதவியோடு வாழ்க்கை யில் முன்னேற்றம் அடைந்து தெய்வீக அனுபவம், ஆன்மீகத் தெளிவு ஆகியவைகளின் மூலமாக இறையுணர்வாகிய பேரானந்தப் பெருநிலையை அடைவாய்.

அந்த நிலையைப் பெறும்போது, ''நான் மிக உயர்ந்த சச்சிதானந்த ஆன்மா. நான்தான் தோற்றமும், உணர்வும், பேரானந்தமுமாகிய முழு முதற்கடவுள். எனக்கு மூப்புமில்லை. மரணமு மில்லை. அச்சமும் துயரமும் எனக்கில்லை. நான் அழிவற்றவன், நானே பேரானந்தமும், சாந்தமு மாவேன்,'' என்ற உணர்வு உனக்கேற்படும். எல்லாவற்றிலும் உனக்கு வெற்றியைத்தரும் இந்த அனுபவமே மிகமேலானது; இறுதியானது. இதைப் பெற்றவுடன் நீ மிகவும் மகிழ்ச்சியடைகிறாய். ''ஆனந்தம்! ஆனந்தம்! பிரம்மானந்தம்! நானே பேரானந்தம்! நானே மிகவுயர்ந்த பேரானந்தம்!'' என்று கூச்சலிடுகிறாய். இதை அடைந்தவுடன் எல்லாச் சூழ்நிலைகளிலும், எல்லாக் காலங்களிலும், இருவேறுபட்ட நிலைகள் அனைவற்றிலும் உனக்கு வெற்றியே கிட்டும். நீ எல்லாவற்றையும் வெல்வாய்.

விழித்துக்கொள்! எழுந்திரு! புறப்படு! இந்த உன்னதமான அனுபவத்தை நோக்கிச்செல். அதற்குள்ளே இருக்கும் அரும்பை மலரச் செய்வதற் கான செயலை மேற்கொள். மூடியிருக்கும் அரும்

பானது மலர்ந்து அதற்குள்ளே இருக்கும் விதை உயிர்பெற்று எழுந்து தெய்வீக அனுபவம் என்னும் மரமாக ஓங்கி வளரட்டும். நீ அதற்காகப்பாடுபட வேண்டும்.

இந்தத் தெளிவு ஏற்கனவே உனக்குள்ளேயே இருக்கின்றது. அது பூட்டிவைக்கப்பட்டுள்ள பெட்டிக்குள்ளே இருக்கும் விலை மதிப்பற்ற அழகிய வைரத்தைப் போன்று இருக்கிறது. அதன் சாவியைத்தான் காணவில்லை. அந்த வைரத்தை நீ அடைய வேண்டுமானல், முதலில் பெட்டியைத் திறக்கவேண்டும். இந்தப் பரிபூரணநிலை உனக்குள்ளே உறங்கிக் கொண்டிருக்கின்றது. நீ அதுவாகவே இருக்கின்ருய். நான் பேசும்போதும், நீ கேட்டுக்கொண்டிருக்கும்போதும்கூட நீதான் தோற்றம் — ஞானம் — பேரானந்தம், நீதான் எப்பொழுதும் தூய்மையாகவுள்ள ஆன்மா. சச்சிதானந்த உணர்வும் நீயே. அதுதான் உண்மையான உணர்வு. இதுதான் தெய்வீக வாழ்க்கை.

---

## 14. மனிதகுலத்துக்கு அறைகூவல்

இப்பூவுலக வாழ்க்கை மிகவும் பொருளுள்ளது. அதற்கு ஆழ்ந்ததொரு நோக்கமும் இருக்கிறது. இதைத் தெளிவாக உணர்ந்து கொள்ளாமல் இங்கு சரியாகவும், முறைப்படியும் உன்னல் வாழ முடியாது. அதைச் சரியான வழியில் செலுத்த வேண்டுமானல், இவ்வுலக வாழ்க்கையில் உன்னுடைய வாழ்க்கையின் மேலான நோக்கம், பயன், இலட்சியம் ஆகியவற்றைப்பற்றித் தெரிந்து கொள்ள வேண்டியது மிகவும் தேவை; இல்லாவிடில் இந்த உயர்ந்த குறிக்கோளை நோக்கிச் செல்வதை விட்டு, வழி தவறி மிக அற்பமானவையும்

பயனற்றவையுமான குறுகிய நோக்கங்களின் பின்னே தவறான நெறிகளில் செல்லவேண்டி நேரிடும். அதனால் துன்பமும், அமைதியின்மையும் பெருத்த ஏமாற்றமும் ஏற்படும். அந்த இழிநிலையை விட மோசம் எதுவுமில்லை. இவ்வுலகில் தெய்வீக வாழ்க்கை நடத்தி அதன் பயனாக மேலானதும் மிகவுயர்ந்ததுமான ஆன்மீக அனுபவத்தை இப்பிறவியிலும் அதற்குப் பிறகும் பெறவேண்டியே இப்பிறவியை எடுத்திருக்கிறாய். மனித சமுதாயத்தைச் சேர்ந்த ஒவ்வொருவருக்காகவும் வகுக்கப் பட்டுள்ள மிகவுயர்ந்த தெய்வீகத் திட்டம் இது தான்.

நீ உண்மையில் தெய்வீகமானவன். நீ இந்த உடலும் அறிவும் மட்டுமல்ல. எலும்பாலும் சதையாலும் ஆகிய இந்த உடலுக்கும் அப்பாற் பட்டவன் நீ. அவைகள் அழியக் கூடியவை, மாறக் கூடியவை. நீ மாறாத, முடிவற்ற, அமர ஆத்மா. ஆன்மீக அறியாமை என்னும் தூக்கத்தில் ஆழ்ந்து, அகந்தை, தன்னலம், ஆசைகள், வேட்கைகள், அச்சம், கவலை, விருப்பு, வெறுப்பு, பொறாமை ஆகிய உடலாலும் மனதாலும் உண்டாகக் கூடிய பல்வேறு வகையான எண்ணற்ற துன்பங்களை அடையக்கூடிய அற்பமான, பலவீனமான, முழுமை பெறாத மனிதன் என்றே கனவு கண்டு கொண்டிருக்கின்றாய்.

அருமை நண்பனே! அறியாமையாகிய உறக்கத்தினின்றும் எப்பொழுது விழித்து எழுந் திருக்கப் போகின்றாய்? உன் கனவிலிருந்து விடு பட்டு உன் உண்மையான இயல்பாகிய தெய்வீகத் தன்மையை உறுதியோடும் மகிழ்ச்சியோடும் உணர் வது எப்போது?

இப்பொழுதே விழித்து எழு. இந்தக் கனவை உடைத்தெறி. உன் பிறப்புரிமையைக் கோரிப் பெறு. உன் உண்மையான நிலையை அடையாளம் கண்டு கொள். உன் உண்மையான இயல்பை அறிந்துகொண்டு, தெய்வீக இன்பத்தையும், அமைதியையும் ஞானத்தையும் அனுபவி. அது தான் உன்னுடைய சிறப்பானதும் என்றும் நிலைத் திருப்பதுமான இயல்பு.

மேற்சொன்ன இலட்சியம்தான் உன் வாழ்க் கையில் முக்கியமான ஒரே நோக்கம். அதை அடைவதற்காகத்தான் உன் வாழ்க்கையை நடத்த வேண்டும். அவ்வாறு சிறந்த நெறியில் வாழ்ந்து, உன் வாழ்க்கையே ஒப்பற்ற ஒரு சாதனையாக விளங்கி, அதன் பயனாக மலரும் ஆன்மீக ஞானத் தால் இன்பமும், அமைதியும், தெளிவும் பெறுவாயாக. அறிவோடும், ஞானத்தோடும் வாழ்ந்து இந்த இலட்சியத்தை அடைந்து, வாழ்க் கையில் உண்மையான வெற்றியைப் பெறுவாயாக.

உன் இயல்பைப்பற்றிய அற்பமான எண்ணத் தினால் உனக்கு பற்றும் துன்பமுமே உண்டா கின்றது. மனிதனுக்கு ஏற்படும் துயரம், திருப்தி யின்மை, சண்டை சச்சரவு ஆகிய அனைவற்றிற்கும் அதுவே மூலகாரணம். தன்னலத்தை வளர்த்துக் கொண்டு, நாணயமின்மை, போட்டி, ஊழல், கொள்ளை, விரோதம், வெறுப்பு ஆகிய தன்னலத் தோடு கூடிய செயல்களில் ஈடுபட்டு வருகிறான். வாழ்க்கையில் அகந்தையோடு கூடிய குறுகிய நோக்கினால்தான் அவைகள் ஏற்படுகின்றன. இது அறிவீனமானது; குருட்டுத்தனமானது. மனிதனின் மிகப்பெரிய தவறும் இதுவே. தனியொருவனுடைய அகந்தை மனப்பான்மையை யும் தன்னலம் கருதும் தன்மையையும் போக்கிக்

கொண்டு, அவனுக்குள்ளே இருக்கின்ற உயர்ந்த தெய்வீகத் தன்மையால் கிடைக்கும் அனுபவத்தைப் பெறவே இப்பிறவி ஏற்பட்டுள்ளது. வாழ்க்கையே சாதனை. வாழ்க்கை நடத்துவது ஆன்மீக நெறியாகும். மனம், மொழி, உடல் ஆகியவற்றால் நடைபெறும் செயல்கள் அனைத்தும் யக்ஞம் அல்லது வேள்வியாகும். தன்னலத்தைக் கருதி இவைகளைச் செய்யக்கூடாது. அப்படிச் செய்வதால் உன் அகந்தை உணர்வு பெருகி, சம்சாரத்தோடும், துயரத்தோடும் உனக்கிருக்கும் பற்றை இன்னும் அதிகரிக்கச் செய்யும். உன் வாழ்க்கையும் செயல்களும் மற்றவர்களுடைய நன்மைக்காகவும் மகிழ்ச்சிக்காகவும் உன்னையே அர்ப்பணித்துக் கொள்ளும் தியாகமாக இருக்கவேண்டும். பரோபகாரம் இந்த வாழ்க்கையின் மூலமந்திரம். யக்ஞம் அல்லது தன்னையே தியாகம் செய்து கொள்வது இந்த வாழ்க்கையின் அடிப்படைக் கொள்கை. உன்னையே கொடுக்கக் கொடுக்க, மாயையான அகந்தையையும் அற்பத்தனமான தன்னலத்தையும் உன்னிடமிருந்து களைந்து எறிவதில் வெற்றி பெறுவாய். இதைச் செய்யச் செய்ய உன்னுடைய உயர்ந்த தெய்வீக இயல்பை அதிகமாக உணரத் தொடங்குவாய். உன் ஆன்மாவைப்பற்றிய உண்மையை நன்கு அறிந்து கொள்வாய். யக்ஞம், பரோபகாரம், தன்னலமற்றசேவை ஆகியவற்றைத் தீவிரமாக வெளிப்படுத்தும் வகையில் உன் வாழ்க்கைநிலை அதிகரிக்க அதிகரிக்க, துயரங்களையும் துன்பங்களையும் வெற்றி கொள்வதும் அதிகரித்து வாழ்க்கையில் உயர்ந்த அமைதியையும் பேரானந்தத்தையும் அடைவதிலும் வெற்றி பெறுவாய்.

உன் வாழ்க்கை முழுவதும் தியாக உணர்வே பிரதிபலிக்கட்டும். இப்பொழுது மனிதன் மற்ற

மக்களைப்பற்றியும் தன்னைச் சுற்றிலுமுள்ள உயிர்களைப்பற்றியும் தனக்குள்ள நோக்கை மாற்றிக் கொண்டு, வாழ்க்கையைப்பற்றி புதிய கண்ணோட்டத்தை ஏற்படுத்திக் கொள்ளும்வரை, இவ்வுலகத்திலுள்ள வருந்தத்தக்க பிரச்சினைகளும், அதனுலேற்படும் சண்டை சச்சரவுகளும் பேராசைகளும் ஏமாற்றுதல்களும், வெறுப்பும் விரோதமும், தனக்கென மற்றவர்களுடைய பொருள்களைக் கவர்வதில் வெறியும், அகந்தையால் மற்றவர்களை அவமதிப்பதும் ஒரு காலத்திலும் மறையா. அல்லது அவற்றிலிருந்து விடுதலையும் கிடைக்காது. மனிதன் தான் பார்க்கின்றபடியே வாழ்க்கையை அமைத்துக் கொள்கிருன். அவனைச் சுற்றியுள்ள வாழ்க்கை அவனுடைய இயல்பையே பிரதிபலிக்கின்றது. பண்பட்ட மக்களின் தீர்வு சமுதாயத்துக்கு ஊறு விளைவிக்கும் துன்பங்களைப் போக்குவதற்குரிய நீடித்ததும் அறிவுக் கொத்ததுமான தியாக மனப்பான்மையை வாழ்க்கையில் அதற்குரிய இடத்தில் நிலை நிறுத்துவதுதான். யக்ஞம் அல்லது தியாக மனப்பான்மையைக் கடைப்பிடி. உன்னுடைய செயல்களில் தியாக உணர்வு மனப்பான்மை இருக்கட்டும். அன்ருட வாழ்க்கையிலும் கடமைகளிலும் பரோபகாரம் சேவை ஆகிய உயர்ந்த கொள்கைகள் மேலோங்கி நிற்கட்டும். வீட்டிலுள்ள ஒவ்வொருவரிடத்திலும் இந்த உயர்ந்த உணர்வு ஊறி இருப்பதால், அவர்கள் அங்குள்ள மற்றவர்களுக்குச் சேவை செய்து அவர்களுக்கு இன்பமூட்டும் வகையில் வாழ்ந்து கடமைகளைச் செய்யட்டும். அப்பொழுது வீட்டிலுள்ள அனைவருடைய வாழ்க்கையும் ஒரு புதிய, மேலான நிலையை அடைந்து மேன்மையுறும்.

ஒவ்வொரு தொழிலிலுமுள்ள மனிதர்கள் தத்தம் தொழிலைப்பற்றி, புதிய கண்ணோட்டம்

ஒன்றை ஏற்படுத்திக்கொள்ள வேண்டும். தங்கள் தொழில்களின் செயல்களின் உண்மையான நோக்கங்களைப்பற்றிய தங்கள் கருத்துக்களை மறு பரிசீலனை செய்ய வேண்டும். அப்போது தாம் செய்ய வேண்டிய தொண்டினைப் பற்றியும் அதனால் சமுதாயத்திலுள்ள மற்ற மக்களின் நலனுக்காகவும் முன்னேற்றத்துக்காகவும் அது பயன்படும் விதத்தைப் பற்றியும் அறிவார்கள். தொழில்முறை வாழ்க்கையும் யக்ஞம் அல்லது வேள்வியே. அதில் பயிலுவது பரோபகாரம். அதில் கிடைக்கும் வருமானத்தைப்பற்றிய கவலை இரண்டாம் பட்சமாகும்; முதற்கவலை அல்ல. இதை நன்கு உணர்ந்து கொள்ள வேண்டும். அது யக்ஞம், சேவை, பரோபகாரம் ஆகிய அடிப்படைக் கொள்கைகளுக்குப் பிறகுதான் வரவேண்டும். இல்லாவிடில் மனிதன் மனிதனாக இருக்கமாட்டான். மனித உருவிலுள்ள மிருகம் தான். பசுத்தோல் போர்த்த புலி ஆவான். அம்மாதிரியே உன்னுடைய சமூக வாழ்க்கையும் அற்பமானதாகவும், வீணானதாகவும், ஆடம்பரக் கேளிக்கையுடனும் இருக்கக்கூடாது. நேரம், சக்தி, பொருள் ஆகியவற்றை வீணே செலவழிக்கக் கூடாது. சமூக வாழ்க்கை என்பது ஆக்க பூர்வமாகவும், பயன் விளைவிக்கக் கூடியதாகவும், சகோதரவுணர்ச்சி, பரிவு, பகிர்ந்து கொள்ளும் மனப்பான்மை ஆகிய பண்புகளால் சிறப்புற்றும் இருக்கவேண்டும். இறைவன் இவ்வுலகில் உன்னை படைத்திருக்கும் சூழலில் உள்ள எல்லா உயிர்களும் உன்னுடைய அண்டை அயலில் வசிப்பவர்களும் நல் வாழ்வும் நன்மையும் இன்பமும் அதிக அளவில் பெற்றுப் பயனடையும் வகையில் அது இருக்க வேண்டும்.

மக்கள் தனித் தனியாகவும், கூட்டமாகவும் இந்த யக்ஞ உணர்வைக் கடைபிடிக்க வேண்டும்.

சேவை, பரோபகாரம் ஆகிய கொள்கைகளை தனியாகவோ, கூட்டாகவோ, மற்றொரு இனத்துடனோ, நாட்டுடனோ கொள்ளும் தொடர்பில் வெளிப்படுத்த வேண்டும். இதுதான் இன்றைய தேவை. இதுவே மனித குலத்தின் தேவையும் ஆகும். இது உலகிற்குத் தேவைப்படுகிறது. வாழ்க்கையில் வளம் பெற்று முன்னேற்றம் அடைய வேண்டுமானால், ஒருவருக்கொருவர் அழித்துக் கொள்ளும் அழிவுநெறியாக மாறாது இருக்க வேண்டுமானால், யக்ஞத்தையே முக்கியமான அடிப்படைக் கொள்கையாகவும் அதை வெளிப்படுத்துவதற்குத் தேவையான உள்ளாற்றலையும் ஏற்றுக்கொள்ள வேண்டும். மனிதனுக்கும் அவன் எதிர்காலத்துக்கும் உள்ள ஒரே நம்பிக்கை இதுதான். நட்பு, நிலைபெற்ற அமைதி, பொது நன்மை ஆகியவைகளுக்கான ஒரே வழி இதுதான். மோட்சமாகிய வீடுபேற்றை அடையவும் மிக உயர்ந்த பேரின்ப நிலையைப் பெறவும் இறுதியில் உதவும் நெறியும் இதுவே.

மனிதன் மற்றவர்களைத் துன்புறுத்தும் காட்டு விலங்கல்ல. அவன் தெய்வீகமானவன். ஒவ்வொருவரிடத்திலும் இறைவனின் இயல்பு அமைந்துள்ளது. அந்த இறை இயல்புக்கு உணர்வூட்டி வெளிப்படுத்தவே மனிதன் இவ்வுலகத்துக்கு வந்திருக்கின்றான். தன்னலமுள்ள தாழ்ந்த நிலையிலிருந்து உன்னை விடுவித்து உன்னுடைய உண்மையான தெய்வீகத் தன்மையின் மேன்மையை வெளிப்படுத்துவதற்கு யக்ஞம் உதவுகின்றது. மக்கள் அதைச் செய்வார்களாக.

அருமை நண்பனே! சுடரொளி ஆன்மாவே! அதை இப்பொழுதே செய்.

இவ்வாறு வணக்கத்திற்குரிய குருதேவர் சுவாமி சிவானந்தா அவர்களின் தொண்டன் வேண்டிக் கொள்கிறேன்.

இறைவன் புகழ் பரவட்டும். அளவற்ற இறையருளும் ஆசிகளும் உங்கள் மேல் பொழியட்டும். உங்களை வாழ்த்துவதில் பெருமகிழ்ச்சி அடைகிறேன். இந்தச் செய்தியின் வாயிலாக என்னுடைய நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

---

# ஸ்ரீ சுவாமி சிதானந்த மஹராஜ் அவர்கள்

# வாழ்க்கை வரலாறு



சுவாமி சிதானந்தர் 1916 ஆம் ஆண்டு செப்டம்பர் திங்கள் 24ஆம் நாள் மங்களூரில் பிறந்தார். அவர் ஸ்ரீனிவாசராவ், சரோஜினி அம்மையார் ஆகியவர்களின் ஐந்து குழந்தைகளில் இரண்டாவது குழந்தை. ஸ்ரீனிவாசராவ் தென்னிந்தியாவிலிருந்த ஒரு செல்வச் செழிப்புள்ள ஜமீந்தார். திருமதி சரோஜினி அம்மையார் இந்தியத் தாய்க்குலத்துக்கோர் எடுத்துக் காட்டாக விளங்கினார். தெய்வப் பற்று மிக்கவர். சுவாமிஜியின் பூர்வாசிரமப் பெயர் ஸ்ரீதர் ராவ் என்பதாகும்.

அவருக்கு எட்டு வயதாக இருக்கும்போது அவருடைய பாட்டனாரின் நண்பரான அனந்தய்யா என்பவரால் அவர் வாழ்க்கையில் ஒரு மாறுதல் ஏற்பட்டது. அனந்தய்யா அவருக்கு இராமாயணம் மகாபாரதம் ஆகிய இதிகாசங்களிலிருந்து கதைகளைச் சொல்லுவார். தவம் செய்வது, முனிவராக ஆவது, இறைவனைக் காண்பது ஆகியவைகளைத் தாம் அடையவேண்டிய இலட்சியங்களாகப் போற்றி வந்தார்.

முன்னாள் சென்னை மாகாணத்தைச் சார்ந்த தென் கன்னட மாவட்டத்திலுள்ள மங்களூரில் ஆரம்பக்கல்வி கற்றார். 1932 ஆம் ஆண்டு சென்னையிலுள்ள சர். எம். சிடி. முத்தையா செட்டியார் உயர் நிலைப்பள்ளியில் சேர்ந்தார். அங்கு மிகச் சிறந்த மாணவர் என்ற சிறப்பும் பெற்றார். அவருடைய புன்னகை தவழும் தோற்றம், மிகச்சிறந்த நன்னடத்தை, அசாதாரணமான குண நலன்கள்

ஆகியவைகளின் காரணமாக, அவரோடு தொடர்பு கொண்ட ஆசிரியர் மாணவர் அனைவருடைய உள்ளங்களிலும் சிறப்பான தனி இடத்தைப் பெற்றார்.

1934-ஆம் ஆண்டு மிகச்சிறந்த மாணவர்களை மட்டுமே சேர்த்துக் கொள்ளும் லயோலா கல்லூரியில் சேர்ந்தார். 1938-ஆம் ஆண்டு இளங்கலைப் பட்டத்தைப் (பி. ஏ.) பெற்றார். பெரும்பாலும் கிறிஸ்தவ மாணவர்களே படிக்கும் அக்கல்லூரியில் அவர் படித்த அந்தக்காலம் அவருடைய வாழ்க்கையில் குறிப்பிடத்தக்க பகுதியாகும். இயேசு பெருமான், அவருடைய சீடர்கள், மற்றுமுள்ள கிறிஸ்தவ முனிவர்கள் ஆகியவர்களுடைய உயர்ந்த இலட்சியங்களும் இந்து தர்மத்திலுள்ள சிறந்த மேன்மையான கொள்கைளும் அவருடைய உள்ளத்தில் ஒன்றாக இணைந்தன. அவர் விவிலிய நூலை மற்றவர்களைப் போல் படிக்கவில்லை. அதை இறைவனைப்பற்றிய உயிரோட்டமுள்ள வரலாறாகக் கண்டார். வேதங்கள், உபநிடதங்கள், பகவத்கீதை ஆகியவற்றிலுள்ள கருத்துக்களைப் போலவே அதையும் உண்மையானதாகவும், உயிரோட்டமுள்ளதாகவுமே கருதினார். அவருடைய பரந்த மனப்பான்மையின் காரணமாக கண்ணனில் இயேசுவைக் கண்டாரே தவிர, கண்ணனுக்குப் பதிலாக இயேசுவைக் காணவில்லை. திருமாலை எந்த அளவுக்குப் போற்றினாரோ, அதே அளவு இயேசு கிறிஸ்துவையும் போற்றினார்.

தொழு நோயாளிகளுக்குத் தொண்டு செய்வதை அவர் தம் குறிக்கோளாகக் கொண்டார். அவர்களை மிகவும் பரிவுடன் பார்த்துக் கொள்வார். பிற்காலத்தில் அவர் ஆசிரமத்தில் சேர்ந்தவுடன் அவருடைய இளம் வயதிலிருந்து தொடங்கிய இந்த இயல்பு, தெய்வீக அன்பைச் செலுத்த

இந்தப் பரந்த உலகில் செயல் வடிவம் கொண்டது. அவர் எல்லோரும் சமம் என்ற மனப்பான்மை யுடன் தொண்டாற்றினர். ஆசிரமத்திற்கருகில் நாலாபக்கங்களிலிருந்தும் மிகவும் கொடிய நோய் களினல் துன்பப் பட்டுக்கொண்டிருந்த நோயாளி கள் பலரும் அவரை நாடி வந்தார்கள். அவர் நோயாளியை சாட்சாத் நாராயணன் என்றே கருதினர். மிகவும் கனிந்த அன்புடனும் பரிவுட னும் அவர்களுக்குச் சேவை செய்தார். அந்த நேரத் தில் எவ்வளவு அவசரமான வேலே இருந்த போதிலும் நோயால் வருந்திக் கொண்டிருக்கும் ஆசிரம வாசிகளின் நோயைத் தீர்க்கும் செயலி லிருந்து அவரை எவராலும் தடுக்கமுடியாது.

தொழுநோயாளிகளின் நல்வாழ்வில் அவருக் கிருந்த ஆழ்ந்த அக்கரையைக் கண்டு அரசினரால் அவரைப் பாராட்டி அவரை மாவட்ட தொழுநோயாளிகள் நல்வாழ்வுச் சங்கத்திற்குத் தேர்ந்தெடுத்தார்கள்.

1936—ஆம் ஆண்டு ஒருமுறை ஸ்ரீதர் வீட்டை விட்டு ஓடி விட்டார். அவருடைய பெற்ருேர்கள் மிகவும் சிரமப்பட்டுத் தேடியபோது, திருப்பதி மலேக்குச் சில மைல்களுக்கப்பால் தனியாக இருந்த ஒரு சாதுவின் ஆசிரமத்தில் அவரைக் கண்டு பிடித்தார்கள். மீண்டும் அவரைச் சமாதானப் படுத்தி வீட்டுக்கு அழைத்து வந்தார்கள்.

1943—ஆம் ஆண்டில்தான் தீர்மானமான முடிவு ஏற்பட்டது. ஏற்கனவே சுவாமி சிவானந்த மகராஜ் அவர்களோடு கடிதங்கள் மூலம் தொடர்பு கொண்டிருந்தார். ஆசிரமத்தில் சேருவதற்கு அவருடைய அனுமதியைப் பெற்ருர்.

ஆசிரமத்திற்கு வந்தவுடன் மருத்துவ சாலை யின் பொறுப்பை ஏற்றுக்கொண்டார். அவர் எந்த நோயையும் தீர்க்கும் ஆற்றல் பெற்றவராகக் காணப்பட்டார். இந்த தெய்வீக ஆற்றலைக் கேள்விப்பட்டு, சிவானந்தா தர்ம மருத்துவ நிலையத் திற்கு ஏராளமான நோயாளிகள் வரத் தொடங் கினார்கள்.

1948—ஆம் ஆண்டு யோக வேதாந்தா வனப் பல்கலைக்கழகம் நிறுவப்பட்டபோது, குருதேவர் அவரை துணைவேந்தராகவும் இராஜயோகத்தில் பேராசிரியராகவும் நியமித்துத் தக்கமுறையில் பெருமைப் படுத்தினார். அவ்வாண்டு முடிவில் குருதேவர் அவரைத் தெய்வீக வாழ்க்கைச் சங்கத் தின் பொதுச் செயலராக நியமனம் செய்தார். அந்தச் சங்கத்தை நல்ல முறையில் நிர்வகிக்க வேண்டிய பெரும் பொறுப்பை அவர் சுமக்க வேண்டியதாயிற்று. அக்கணம் முதல் தம்முடைய தோற்றம், அறிவுரை, திறமையான தலைமை ஆகியவற்றின் உதவியால், சங்கத்தின் செயல் முறைகளுக்கு எல்லாம் உணர்வூட்டினார். தங்கள் உணர்வுகளையெல்லாம் தெய்வீகமாக உயர்த்திக் கொள்ள வேண்டுமென்று அனைவருக்கும் ஊக்க மூட்டினார்.

1949—ஆம் ஆண்டு குரு பூர்ணிமா தினத்தன்று ஸ்ரீதர் ராவ், சுவாமி சிதானந்தா என்ற பெயருடன் சன்னியாச ஆசிரமத்தில் நுழைந்தார். குருதேவர் சுவாமி சிவானந்த மகராஜ் அவர்கள் தீட்சை வழங்கினார்கள். ''சிதானந்தர்'' என்ற பெயர் ''தூய அறிவில் இன்பத்தைக் காண்பவர்'' என்பதைக் குறிக்கும்.

1959-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் சிதானந்த சுவாமிகள் அமெரிக்காவில் பரவலாகச் சுற்றுப்பய ணம் சென்று வரும்படி சுவாமி சிவானந்தாஜி அவர்

களால் தம்முடைய பிரதி நிதியாக தெய்வீக வாழ்க்கையின் சுடரொளியை புதிய உலகத்தில் பரப்புவதற்காக அனுப்பப்பட்டார். ''மேற்கு நாட்டிலுள்ள மக்களுக்கு இந்திய யோகக்கலையை விளக்கிச் சொல்வதற்கு மிகவும் தகுதிவாய்ந்த இந்திய யோகி'' என்று அமெரிக்க நாட்டு மக்கள் அவரைப் போற்றிப் புகழ்ந்தார்கள். தென் அமெரிக்க நாட்டிலும் பயணம் செய்து மாண்டிவிடியோ. போனஸ் அயர்ஸ் ஆகிய இடங்களில் பிரசாரம் செய்தார். அமெரிக்காவிலிருந்து புறப்பட்டு ஐரோப்பிய சுற்றுப்பயணத்தை விரைவாக முடித்துக்கொண்டு 1962 மார்ச் மாதம் ஆசிரமம் திரும்பினார்.

1963 ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதத்தில் குருதேவருக்குப் பின்னர் தெய்வீக வாழ்க்கைச் சங்கத்தின் தலைவராகவும், யோக வேதாந்தா வன அகாடமியின் வேந்தராகவும் தேர்ந்தெடுக்கப் பட்டார்.

குருவுக்கேற்ற சீடராக விளங்கும் சுவாமிஜி, மிகவும் பரவலான அமைப்புள்ள தெய்வீக வாழ்க்கைச் சங்கத்தில் மட்டுமல்லாமல், உலகெங்கிலும் பரவியுள்ள நாடுகளில் அவருடைய அறிவுரையையும் துணையையும், நெறிப்படுத்தலையும் நாடிநிற்கும் எண்ணற்ற சாதகர்களின் உள்ளங்களிலும் தியாகம், சேவை, அன்பு, ஆன்மீக இலட்சியம் ஆகிய கொடிகளை உயர்த்துவதற்காக இந்த ஒருசில ஆண்டுகளில் மிகவும் கடினமாகப் பாடுபட்டுக் கொண்டு இருக்கிறார். கோபுரம் போன்று மிக உயர்ந்த துறவியாகவும், ஆன்மீக காந்தமாகவும் விளங்கித் தம்முடைய குற்றங்குறையற்ற வாழ்க்கையால் மக்கள் அனைவரின் அன்புக்கு பாத்திரமாகி இருக்கின்றார். தெய்வீக வாழ்க்கையைப் பற்றிய இலட்சியங்களை மீண்டும் உலகில் நிலை நாட்டவேண்டுமென்று எல்லாத் திசைகளிலும்

கடுமையாக உழைத்துக் கொண்டு இருக்கிருர். வலிந்து உதவி செய்யும் அன்புள்ளமும் இயல்பாகவே நற்குணங்கள் நிறைந்திருப்பதின் பொலிவும் கொண்ட சுவாமிஜி அவர்கள் பல்லாயிரக் கணக்கான மக்களின் வாழ்வில் அளவுகடந்த ஆறுதல் அளித்துள்ளார்கள். இந் நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் அவ்வப்போது பயணம் செய்வதோடு. மலேசியா ஹாங்காங் நாடுகளுக்கு 1966 ஆம் ஆண்டு சென்று அங்கும் உண்மையான பண்பாடு, ஆன்மீகம், தன்னலம் கருதாமை என்னும் வித்துக்களைப் பரவலாகத் தூவி, ஆயிரக்கணக்கான மக்களின் மனங்களில் தெய்வீக வாழ்க்கைக் கலையாகிய செடியைப் பயிர் செய்திருக்கின்ருர். எனவே எல்லோரும் அவரிடம் நன்றியறிதலுள்ளவர்களாகிருர்கள்.

எண்ணற்ற மக்களின் வேண்டுகோளுக்கிணங்க சுவாமிஜி அவர்கள் 1968 ஆம் ஆண்டு உலகச் சுற்றுப் பயணத்தை மேற்கொண்டார்கள். உலக முழுவதுமுள்ள நாடுகளில் நிறுவப்பட்டுள்ள சங்கக் கிளைகளைப் பார்வையிட்டு, குருதேவருடைய சங்கத்தைச் சேர்ந்த அடியவர்களுக்கும் சாதகர்களுக்கும் தம்முடைய ஆன்மீக அறிவுரைகளை வழங்கி அவர்கள் உள்ளங்களை உயர்த்தி இருக்கிருர்கள். அது ஒரு வரலாற்றுச் சிறப்புடைய வெற்றிகரமான சுற்றுப்பயணமாகும். 1970 ஆம் ஆண்டு தலைமையிடம் திரும்பிய சுவாமிஜி அவ்வப்பொழுது உள்நாட்டிலும் வெளி நாடுகளிலும் சுற்றுப் பயணங்களை மேற்கொண்டார். பக்தர்களின் வேண்டுகோளுக்கிணங்க மீண்டும் 1979 ஜூலையில் அமெரிக்கா, ஐரோப்பா நாடுகளுக்கு பயணத்தை தொடங்கி 1980 செப்டம்பரில் குருதேவ் சிவானந்த ஜயந்திக்கு தலைமை நிலையத்திற்குத் திரும்புகின்ருர்.

## ஸ்ரீ சுவாமி சிவானந்தர் அருளிய
## தமிழ் நூல்கள்

| | |
|---|---|
| வாழ்விலும் ஆத்மானுபூதியிலும் வெற்றிக்கு நிச்சயமான வழிகள் விலை ரூ. | 7-00 |
| * தர்ம உபதேசம் ... ... | 5-00 |
| யோக சாரம் ... ... | 5-00 |
| குண்டலினி யோகம் ... ... | 5-00 |
| சிறுவர் சிறுமியர்களுக்கு தெய்வீக வாழ்க்கை | 5-00 |
| சிவானந்தரின் சத்சங்க உபதேசங்கள் | 5-00 |
| பிரம்மசர்யத்தின் ரகஸ்யம் ... | 4-00 |
| எண்ணத்தின் ஆற்றல் ... ... | 4-00 |
| பக்தியோகம் ... ... | 4-00 |
| * நன்னெறிக் கதைகள் ... ... | 4-00 |
| * குரு தத்துவம் ... ... | 3-00 |
| * சிவானந்த வாணி ... ... | 2-00 |
| தியானயோகம் ... ... | 3-00 |
| ஆரோக்கிய வாழ்விற்கு ஆசனங்களும் பிராணுயாமமும் | 1-50 |
| தெய்வீக குணங்கள் ... ... | 1-50 |
| கவலையிலாப் பெருவாழ்வு (சுவாமி சிதானந்தா) | 5-00 |
| * தெய்வீக வாழ்க்கை ,, ,, | 5-00 |
| * இராஜயோகச் சொற்பொழிவுகள் ,, | 5-00 |
| சீரிய வாழ்க்கைக்குச் சிறந்த வழிகாட்டி | 3-00 |
| சிதானந்தரின் சத்சங்க உபதேசங்கள் | 2-00 |
| நித்திய நெறிகள் ,, ,, | 2-00 |
| சர்வரோக நிவாரணி (சுவாமி பூமானந்தா) | 4-00 |

புத்தகங்களுக்கு உரிய விலையுடன் தபால் கட்டணமும் சேர்த்து அனுப்புங்கள். V. P. யில் அனுப்புவதில்லை.

ஆஸ்ரமத்தின் மாதாந்திர வெளியீடு :

''சிவானந்தர் அருள்வாக்கு'' வருட சந்தா ரூ. 5-00

காரியதரிசி, தெய்வீக வாழ்க்கைச் சங்கம்,

இராசிபுரம்-637408, சேலம் Dt.

* 1979 ஆம் ஆண்டு புதிய வெளியீடுகள்